உ

குமரன் துணை.

# முகவுரை

---

தெய்வப்புலமைத் திருவள்ளுவப் பெருந்தகை அருளியுள்ள திருக்குறளின் கருத்துக்களுக்குப் பொருத்தமான கதைகளை இராமாயணம் பாரத முதலிய இதிகாசங்களினும், காந்தம் பாகவத முதலிய புராணங்களினும், சிந்தாமணி சிலப்பதிகார முதலிய காவியங்களினும், பத்துப்பாட்டு எட்டுத்தொகை முதலிய சங்க நூல்களினும், வேறு பல நூல்களினும் இருந்து தெரிந்தெடுத்து எமது குலதெய்வமாகிய குமரேசனது முன்னிலையில் விண்ணப்பித்து அவற்றிற்கு விடைகூறு முறைமையில் குறள்களை உதாரணமாக எடுத்துக்காட்டி யிற்றைக்கு மூன்று வருடங்கட்கு முன்னரே யிந்நூலை முடித்துவைத்தும் வெளிப்படுத்தக் கூசி வாளா விருந்தேன். இங்ஙனமிருப்ப, அறிஞர் பலர் இந்நூலுட் சில பாக்களைக் கேட்டு மகிழ்ந்து இதனை அச்சிலேற்றி அனைவருக்கும் உபகரிக்க வேண்டுமென்று என்பால் அன்பால் என்னைத் தூண்டினர் அன்னார் வேண்டுகோளைச் சிரமேற்கொண்டு இதுபொழுது இதனை வெளிப்படுத்துகின்றேன்.

கதைகளைக் குறட்பாவில் அமைத்துத் திருக்குறள்களோடிணைத்துத் தனிச்சீரும் சேர்த்திருத்தலினால் இந்நூல் முழுதும் நேரிசை வெண்பாவால் நிறைந்துள்ளது. தெய்வ வணக்கமும் அவையடக்கமும் உள்பட இதில் 1332 வெண்பாக்கள் அடங்கி யுள்ளன.

செவிக்கும் வாய்க்கும் சிந்தைக்கும் இனியவாய சிறந்த சொற்செறிவும் இருவினையும் நீக்கும் அருமருந்தனைய உயர்ந்த பொருட்பொலிவும், பொருந்திவிளங்கும் நமது தமிழ்வேதத்தின் அமிழ்தமயமான நீதியொழுக்கங்களையும் பொருள் நுணுக்கங்களையும் அறிந்தனுபவித்து ஆனந்த மடைவதே மக்கட்பிறப்பின் மாண்பயனாகும். அருமையான இத் தரும நூலை யருளிய நாயனாரே நமக்கு நல்ல தாயாராவர். தாய்மார் தனவமுதூட்டி உடற்குறுதி செய்வர்.

நாயனார் குறளமுதூட்டி உயிர்க்குறுதி செய்கின்றார். இக் கருணை வள்ளல் காட்டியுள்ள குறள் நீதிகளும் அவற்றிற்கு உரிமையான பல அரிய சரிதங்களும் இதில் ஒருங்கமைந்துள்ளன. பாலொடு கலந்த நீர்பாலாகு மாறுபோல் வள்ளுவர் நூலொடுகலந்த இதுவும் ஓர் நூலாகும் என்பது சால்பாம்.

எவ்வகையினாலாவது திருக்குறளின்பயனை எல்லாரும் பெற்று இன்புற வேண்டுமென்பதே என் வேட்கை. இவ் வேட்கையே யெனது நாணத்தை ஒருபுறமொதுக்கி யென்னை யிந்நூலை யியற்றும்படி செய்தது. இந்த நல்ல எண்ணத்தை என் உள்ளத்தில் தோற்றுவித்து அதனைநிறைவேற்றிய திருவருளையும் குருவருளையும் சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன்.

திருவள்ளுவர் நிலையம்,
தூத்துக்குடி. } ஜெகவீரபாண்டியன்.



# Introduction.

1. The present volume is a fitting companion to Thirukural, the divine work of great creative genius Thiruvalluvar who is universally revered as a saint throughout the Tamil World.

2. This book, the first of its kind in the field of Tamil Literature, is composed by the Great Scholar and Poet **Jagaveerapandian** of Ottanatham and every page of it, which is replete with the grace and splendour of word beauty enhanced by the ethical import of each couplet, is a clear proof of the author's deep penetration and critical powers of research in the religious literature of the land.

3. The abstract ethical import of each couplet of the Kural is illustrated by suitable anecdotes culled out from the Puranic and other Hindu literature of the past and is written in the very same sweet rythym as that of the Kural which is a striking evidence of the author's poetic composition which is as much inspired as the original itself. For the reason that each Kural is definitely backed and aptly illustrated by some Puranic anecdotes and other, the value of original work is enhanced hundread fold, its meaning of each couplet being made richer and fuller. Hence such a useful and interesting work as the present, which is a genuine and patriotic attempt on the part of the author to renovate the past will surely attract the attention of the Tamil world.

4. At the same time, wherever the reader may turn his eye through the 1332 stanzas of this volume, each section bears the strong impression of the author's profound scholarship, critical powers of research and admirable talents of poetic composition. For the reasons stated above it is no doubt that the present volume is a rich addition to the Tamil literature. The Tamil world itself owes a deep debt of gratitude to the author for having broken a new ground in the field of research.

5. This book must be in the hands of all lovers of Tamil literature, especially the readers of Kural if the full meaning of the divine work should be understood in its proper setting. Also the work may be placed in the hands of school boys and taught regularly as class lessons to them to produce in them a love and reverence for the past.

6. It is finally hoped that by the kind of reception given to the present volume by Tamil reading public, the author would be spurred into fresh composition of a similar nature and thus enrich the Tamil Literature.

**Swami Vidyanantha,**

*Madras.*

# நூன்முகம்.

புனிதம் நிறைந்த இனிய இந்நூலே
நூலென நினைந்து சாலவும் மகிழ்ந்தேம்.

இந்நூல் பொய்யாமொழியைத் தழுவியுள்ளது. புராதனமான பல சரிதசாரங்களை உதாரணமாக எடுத்துக்காட்டிக் குறள் நீதிகளை யினிதாகவும் தெளிவாகவும் விளக்குகின்றது. திருக்குறளுக்கு எளிய நடையில் தெளிய எழுதிய ஒரு சிறந்த விரிவுரை என்றே யிதனைச் சொல்லிவிடலாம். இவ்வரிசையில் முன்னரே பெரியோர்களால் சில நூல்கள் செய்யப்பட்டுள்ளன. ஆயின், அவற்றிற்கும் இந்நூலுக்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. அவை அதிகாரத்துக்கு ஒவ்வொரு குறளையே தெரிந்தெடுத்துச் செய்யப்பட்டன. இது குறள்கள் முழுமையும் தழுவியுள்ளது.

ஆயிரத்து முந்நூற்று முப்பது அரியகுறள்களுக்கும் பொருத்தமான கதைகளைத் திருத்தமாக இணைத்து இந்நூல் செய்யப் பெற்றிருக்கிறது. இதனானே இதன் அருமையும் பெருமையும் இனிது புலனாம். இது சிறந்த உரையும் நிறைந்த கதைவிளக்கமும் திருந்தியநலனும் பொருந்தி யுள்ளது.

இந்த அரியநூலை ஸ்ரீமான் ஜெகவீரபாண்டியனவர்கள் செய்து உதவியிருக்கின்றார்கள். இவர்கள் நுண்ணிய நூலறிவோடு தண்ணிய சீலமும் வாய்ந்தவர்கள். இந்நூலை முடித்த திறமே இவர்களது கல்வித்திறத்தை யினிது காட்டும். இதனைப் படித்தவுடனே பாண்டியனவர்களுடைய கவித்துவசக்தியும் மதிநுட்பமும் ஆராய்ச்சித்திறனும் பயிற்சியின்பரப்பும் எவர்க்கும் நன்கு தெளிவாம். உலகுக்கெல்லாம் இஃதொரு நல்விருந்தாக இருக்குமென்று நம்புகின்றேன். இந்நூலின்பயனை யெல்லாரும் எய்தி இன்புறுமாறு திருவருளைச் சிந்திக்கின்றேன்.

திகம்பரவித்தியானந்த சுவாமிகள்,

சென்னை.

# சிறப்புப்பாயிரம்.

---

வள்ளுவர்வாய் வந்ததிருத் தெள்ளமுதாந் திருக்குறளை
மருவி யின்பம்
துள்ளுமுயர் குமரேச வெண்பாவொன் றுலகுவந்து
துதிக்கச் செய்தான்
கொள்ளுமியற் புலமையொடு கோதறுநற் குணங்கள்குடி
கொண்ட தூயோன்
தெள்ளுபுகழ்ச் செகவீர பாண்டியனுங் கவிராஜ
சிங்க மன்னே.

உ

சிவமயம்.

# திருக்குறட் குமரேச வெண்பா.

## காப்பு

போதந் தருசெய்ய பொய்யா மொழிபுணர்த்தி
ஓதுகின்ற இந்நூற் குறுதுணையாச்—சோதிமிகு
மாதங்கங் கொண்டே மகிழ்பரமன் தந்தவொரு
மாதங்கங் கொண்டேன் மனம்.

இதன் பொருள்.

மெய்யுணர்வைத் தருகின்ற செவ்விய திருக்குறளை யிணைத்துச் சொல்லுகின்ற இந்நூலுக்கு நல்லதுணையாக, ஒளிமிக்க உமாதேவியை யொருபாகத்தில் வைத்து, மகிழ்கின்ற பரமபிதிதந்த ஒருமாதங்கத்தை யான் மனத்துட் கொண்டேன் (என்பதாம்.)

மனத்துட் கோடல்—நினைத்துத்துதித்தல்.
பொய்யாமொழி என்றது திருக்குறளை.
மெய்யான நூல் ஆதலால் இஃது இப்பெயர்பெற்றது.

தான் உணர்த்திய நெறியில் வழுவாது ஒழுகுவார்க்குப் பொருந்திய பயனைப் பொய்படாதபடி விளைவிக்கும் திருந்திய மெய்மொழிகளால் தேவர் இந்நூலைச் செய்துள்ளமை தேற்றம். செய்ய பொய்யாமொழி—செம்மையும், மெய்மையும் சேர்ந்த மொழி, செம்மை— செவ்வியதன்மை. அஃதாவது முழுமுதற்பரமன் அருள்நெறியோடு யாதும் மாறுபடாத நேர்மை என்க. மெய்மை—உயிர்கட்கு என்றும் உறுதிபயக்கும் உண்மை.

மாதங்கம்—யானை. அது தனது முகத்தையுடைய விநாயக மூர்த்தியை யீண்டுவிளக்கி நின்றது. ஒரு என்றது தனிமை புதுமை கருதி. மாதை அங்கத்தில் வைத்து மகிழ்பரமன்தந்த ஒரு மாதங்கத்தை எனது மனத்தில்வைத்து யான் இந்நூலைச் செய்கின்றேன் என்பதாம்.

இதனால் இஃது இனிது முடியும் என்பது துணிபு.

இஃது இந்நூல் மங்கலமா முடியும்பொருட்டு ஐங்கரக்கடவுளை வாழ்த்திய தென்க.

திருக்குறளைத் தழுவிக் குமரேசனை முன்னிலையாக் கொண்டு வெண்பாவால் செய்தபடியால் இந்நூல் திருக்குறட் குமரேச வெண்பா எனப் பெயர்பெற்றது.

---

## அவையடக்கம்.

அங்கணநீர் கங்கை யடைந்தவுட னேபுனித
மங்கலநீர் ஆகி வயங்காதோ—இங்கெனது
புன்பாவும் வள்ளுவர்தம் பொன்பாவைச் சேர்ந்ததனால்
இன்பாகு மன்றோ இனி.

புன்மை, எளிமையைக்குறிக்கும்; பொன்மை அருமையை உணர்த்தும். ஓகாரங்கள் ஆக்கந்தோன்ற நின்றன.

உடனே ஆகி வயங்காதோ—அடைந்த அப்பொழுதே விழுமிய தீர்த்தமாய் விளங்காதோ? விளங்கும் என்பது உலகம் தெளிந்த வுண்மையாதலால் வினு துணிவுதோன்ற நின்றது. அன்றோ என அடியில்வரும் வினுவின்கண்ணும் இவ்வுண்மையை ஆய்ந்து கொள்க. உடம்பை மாத்திரம் தூய்மைசெய்து நிற்கும் பிறநீர் போலாது உயிரையும் புனிதமாக்கி நலங்கனிந்து நிலவுதலால் கங்கை, புனிதநீர் மங்கலநீர் என நின்றது. புனிதம்—தூய்மை. மங்கலம்—நன்மை.

அவையடக்கமாவது அவையிலுள்ள புலவோர் அடங்கி அமருமாறு நூல்செய்யும் புலவோன் பணிவுடைமைதோன்ற வழிமொழி கூறல்.

அவை யடக்கியலே அரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்று
எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே.
(தொல்காப்பியம்)

ஆசிரியர் தொல்காப்பியனார் புலவர்க்கு என்னாது மாந்தர்க்கு என இதில் அருளியுள்ளதன் பொருளினுண்மையை ஆய்ந்துணர்ந்து கொள்க. அரில் தப—குற்றம் நீங்க.

தம் வழிபாட்டைப்புலப்படுத்தி இனியவாகச் சொல்லிப் புலமுடைய அவையை முதலில் மகிழ்வித்து நவையகற்றி உலகம் நலமுற நூலை உதவுதல் புலவர் இயல்பாம் என்க. தன் அடக்கம் காட்டிக் கவி அவையை அடக்குதலால் இது, அவையடக்கம் எனநின்றது. உலகிற் பல்வேறிடங்களில் பரவியிருக்கும் புலவர் பெருமக்களெல்லாரும் ஒருகாலத்தே ஓரிடத்தே ஒருங்குகுழீஇ நேர்முகமாயிருப்பதாக நினைந்துகொண்டு இங்ஙனம் புனைந்து கூறுதல் கவிமரபென்க. கடவுள்வாழ்த்துப்போல் மக்கட்கு இது, மிக்க நற்பயனை விளைத்து வருதலால் அதனோடு ஒக்கவைத்தெண்ணும் உயர்வுடையதாம். அது தெய்வசிந்தனையை உணர்த்திநிற்கும்; இது அடங்காமையை யொழித்து அடக்கத்தை வளர்த்துவரும் என்க.

நதிகள் எவற்றினும் சிறந்து புனிதமும் இனிமையும் பொருந்தித் தன்னைச்சார்ந்தவுயிர்களுக்கு நலங்கள் பலவுந் தந்து வருகின்ற தெய்வநதியாகிய கங்கை, எல்லாநூல்களினுஞ் சிறந்து தூய்மையும் வாய்மையும் தோய்ந்து, ஆழமும் தெளிவும் வாய்ந்து தன்னையாய்ந்த மக்களுக்கு எல்லா நலங்களையும் இனிது உதவி வருகின்ற தெய்வ நூலாகிய திருக்குறளோடு இங்கு உவமை கூறநின்றது.

அங்கண நீர் கங்கை நீரைக் கலந்தவுடனே தனது இழிவு நீங்கி விழுமிய தீர்த்த மாதல்போல, எனது எளிய பாவும் வள்ளுவரது அரிய பாவைத்தழுவி யுள்ளதனால் அதன் எளிமை நீங்கி அருமையும் பெருமையும் அடையும் என்பது கருத்து.

இதனால் அவையடக்கம் கூறப்பட்டது.

உ

சிவமயம்.

# திருக்குறட் குமரேச வெண்பா.

## முதல் அதிகாரம்.

### கடவுள் வாழ்த்து.

அஃதாவது கடவுளை வாழ்த்துதல். கடவுள் என்னும் சொல் கடந்து நிற்பது என்னும் பொருளது. எல்லாத் தத்துவங்களையும் கடந்து நம்மனோரது உரையுணர் வெவற்றிற்கும் எட்டாதபடி உயர்ந்துநிற்கும் பரம்பொருளை அஃது உணர்த்திநின்றது. இம் முழுமுதற்பொருளை மனம் மொழி மெய்களால் நினைந்து வாழ்த்தி வணங்கி வாழ்தல் மன்னுயிர்க்கெல்லாம் முன்னுறுகடமையாம். நம் உயிர்க்கு உறுதி யெனக் கருதப்பட்ட பொருள் நான்கு அவை, அறம் பொருள் இன்பம் வீடு என்பன. அவற்றுள் இறுதி யிலுள்ள வீடு தனித்த அநுபவத்தாலன்றி இனைத்தென உரையால் உணர்த்த இயலாது ஆதலால் அதனை அநுபவ வாயிலாக உறுதி பெற வைத்துவிட்டு முன்னுள்ள மூன்று பொருள்களையும் முறை யே நூலால் உரைக்கப்புகுந்த அடிகள் தம்கருத்து இனிது நிறை வேறுமாறு முதலில் இங்ஙனம் தெய்வ வழிபாடு செய்யலுற்றார். மேற்குறித்த அறம் முதலிய மூன்றும் சத்துவம் இராசதம் தாம தம் என்னும் முக்குணங்களின் கூறாக முறையே எண்ணப் படுமாதலால் அக்குணங்களைத் தமக்கு வடிவங்களாகக் கொண்டுள்ள மும்மூர்த்திகட்கும் பொதுவாக இதுகூறப்பட்டது என்க. எனவே மேல்நின்ற வீடுபோல் என்றும் வீடாது நின்று இம் மூன்று நிலைகளுக்கும் மூலமாயுள்ள மூவாமுதல்வனையே தாவா இன்பம் தலைவரும்படி ஓவா அன்புடன் உவந்து நினைந்து, உலக முய்யப் பாவால் வனைந்து நமதேவர் வாழ்த்தினராயிற்று.

பூவுலகோ டெங்குமேன் பூண்ட துமைகேள்வன்
கோமுகிழ்த்த தன்மை குமரேசா—மேவும்
அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு. (க)

இதன் பொருள்

**குமரேசா!** உமைகேள்வன் கோமுகிழ்த்த தன்மை பூவுலகோடு எங்கும் ஏன் பூண்டது? எனின், எழுத்து எல்லாம் அகரம் முதல; அதுபோல உலகு ஆதிபகவன் முதற்று என்க.

இது, கடவுளுண்மையை ஓர் உவமங் கூறி யுணர்த்துகின்றது. கேள்வன்—கணவன். கோ—கண். முகிழ்த்த—குவித்த.

பூவுலகோடு எங்கும் என்றது இந்நிலவுலக முதலாக மேல் கீழ் உள்ளன எங்கணும் என்றவாறு. பூ எனத் தொடுத்தது இனமும் மங்கலமும் இசைந்து தோன்ற என்க. ஓடு எண்ணிடைச் சொல். உம்மை எஞ்சாமையை யுணர்த்திநின்றது. வேறுபெயராற் கூறாது உமைகேள்வன் என்றது ஆண்மை பெண்மை என்னும் இருவகை இயல்புங் கலந்தே இவ்வுலகம் இயங்குகின்ற தென்னும் உண்மை தோன்ற. "உமை சிவம் என்ப என்றும் ஒளிர்குண குணியாய் மேவி, அமையு மிவ்வுலகுக் கெல்லாம் ஆதியாய் நிற்கு மன்றே" என்றபடி நின்று நிலவுதலால் இப்பெயர் இங்கு நிலைபெற வந்தது.

நீலமேனி வாலிழை பாகத்து
ஒருவ னிருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே. (ஐங்குறுநூறு.)

உலகு உயிர்க்கெல்லாம் தலைவனாய் இறைவன் ஒருவன் உளன் என்பதனை உணர்த்தற்கு அகரத்தை இணைத்துக் கூறியது உறுதிபெற எளிதாகத் தெளிவுறும் என்பது கருதி.

எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன; அது போல உலகம் ஆதிபகவனாகிய முதலையுடையது என்பதாம்.

முதற்றே என்பதில் ஏகாரம் தேற்றம். இங்ஙனம் தோற்ற வைத்தது முதல்வனுண்மையை உறுதிபெறக்கொண்டு உய்ய வேண்டி என்க.

எழுத்து உயிரும் ஒற்றும் என இருவகைப்படும். உலகம் உயிருடைப்பொருளும் உயிரில் பொருளும் என இருவகைப்படும். அகரம் எல்லா எழுத்துக்களையும் கலந்து இயக்கித் தானும் தனித்தியங்கும். ஆதிபகவனும் எல்லாப் பொருள்களையும் கலந்து இயக்கித் தானும் தனித்து இயங்குவன். அகரம் இயங்காவழி அனைத்தெழுத்தும் எனைத்தும் இயங்கா. அவன் அசையாவழி அணுவும் அசையாது. இவ்வுண்மை உமைகேள்வன் திருக்கண் குவித்த காலத்தில் காணப்பட்டது. அது பின்வரும் சரிதத்துட் காட்டப்படும்.

நம்மால் காணப்படுகின்ற இவ்வுலகத்தைக்கொண்டு காணப் படாத கடவுள் உண்மையை நமக்குக் காட்டவந்த நாயனார், நாம் அறிந்துள்ள அகரமாகிய எழுத்தின் தன்மையைக்காட்டி நம் அறிவுக்கெட்டாத ஆதிபகவனது இயல்பை இவ்வாறுணர்த்தினர்.

இறைவன் அடங்கினால் எல்லாம் அடங்கும், அவன் அசைந்தால் அகிலமும் அசையும் என்னும் இத்தலைமைத்தன்மை அகரத் திற்கும் ஒருவகையில் அமைந்திருத்தலால் அஃது இங்கு ஆதி பகவனுக்கு உவமையாக வந்தது.

ஆயின், அகரம் அறியார்க்கு இது கருவியன்றே? யெனின், கடவுளது உண்மையை எடுத்துக்காட்டும் இவ்வுவமையானது எழுத்தறிவுடையார்க்கே அமையுமென்று கொள்க. அறியார்க்கு வேறு வகையான் உணர்த்தப்படும் என்க. "உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே" என்றது தொல்காப்பியம்.

நமது தேவர் அருளியுள்ள திருக்குறளானது தமிழ்ச்சுவை முழுவதுந்தழுவி தமிழுக்கே பெருஞ்சிறப்பாக அமைந்துள்ள ஒரு தனி நூல் என்பது அதில் காணப்படும் சில குறியீடுகளை உய்த் துணர்வார்க்கு இனிது புலனும். அவற்றுட் சிலவருமாறு:— "அகர

முதல், னகர இறுவாய்" என ஆசிரியர் தொல்காப்பியனார் அருளிய படி தமிழ் மொழியானது தனது எழுத்துக்களுள் அகரம் முதலி லும் னகரம் இறுதியிலும் அமையப்பெற்றுள்ளது. திருக்குறளும் அவ்வுரிமைதோன்ற முதலில் அகரமும் முடிவில் னகரமும் பெற்று விளங்குகின்றது. எங்கே பேறெனின்! "அகர முதல" என ஆதி யில் தொடங்கியும், "முயங்கப்பெறின்" என முடிவில் முடிந்தும் நிலவுதல்காண்க. இன்னும் தமிழெழுத்துக்கள் உயிரும் மெய்யும் என இருவகையாய் முப்பதென்னும் ஒரு தொகையுள் அடங்கும். அவை உயிர்க்கணம், வன்கணம், மென்கணம், இடைக்கணம் என நால்வகைக் கணங்களாகவும் வழங்கப்படும். இவ்வினமுந்தோன்ற முதற் குறள் முதல், நான்காவது வரை இக்கணங்கள் நான்கும் முறையே இணங்கியுள்ளன.

இன்னும், நுண்ணுணர்வான் ஆராய்வார்க்குப்பல நலங்களும் நயங்களும் இதில் தோன்றும்; அவையெல்லாம் திருக்குறளானது தமிழுக்கே உரிமையும் பெருமையும் தரவந்த ஒரு தனி நூல் என் பதை ... ர்த்தும் என்க.

எழுத்துக்களுக்கு அகரம்போல் இவ்வுலகிற்கு ஓர் முதல்வனு ளன்; அவன் எல்லாமுடையவன்; அவனது அருள் வலியால் யாவும் நிலைபெற்றுள்ளன என இஃதுணர்த்தி நின்றது.

உமைகேள்வன் கோமுகிழ்த்த தன்மை:—பிரமாவின் மானச புத்திரர்களாகிய சனகாதியர் நால்வரும் உமாபதியை யணுகித் தங்களுக்குத் தத்துவஞானத்தை புணர்த்தும்படி வேண்டினர் அது, வாக்காற் சொல்லிப்போதிக்கும் இயல்பினையுடையதன்றாத லால் அப்பரமன் சொல்லாமல் சொல்லல் என்னும் மோனநிலையால் அவர்கட்கு ஞானநிலையை புணர்த்தினார். எள்ளுள் எண்ணெய் போல் எங்கும் நிறைந்துள்ள அம்முழுமுதற் பரமன் அங்ஙனம் உணர்த்துங்கால் திருக்கண் முகிழ்த்துச் செங்கை குவித்துச் சின் முத்திரை தரித்தார். சிறிதுபொழுது அசைவற்று மோனமுற்றி ருந்தார். அவ்வமயம் அகிலமும் அவ்வண்ணமே அடங்கியிருந் தன. உயிர்களெல்லாம் முயற்சியும் இச்சையும் முற்றுந்துறந்தன. அலைகின்ற கரணங்கள் அடங்கி நின்றன. பின்னர் மோனம் நீங்கி

விழித்தார். எல்லாவுயிர்களும் இச்சையுற்றெழுந்தன. உலக போகங்களை நாடின. நிலவி எங்கணும் நீடின. உலவிலின்புறலோடின. அயர்ச்சியற்றாடின. முயற்சியைக்கூடின என்பதாம்.

உடலில் உயிர்போல் எல்லாவற்றுள்ளும் கலந்து இறைவன் எழுந்தருளியிருக்கின்றார் என்பதும், சகல சீவகோடிகளும் அண்ட கோடிகளும் அவருக்குத் திருமேனிகளாக அமைந்துள்ளன என்பதும், அவரே உலகமுதல்வர் என்பதும், இதனால் இனிதுபுலனும். இச்சரித உண்மையை இதனடியில் வருகின்ற கவிகளில்நன்கு தெளியலாம்.

காரணமுதல்வன் மோனக் காட்சியால் அமரரெல்லாம்
சூர்அரமகளிர் தங்கள் துணைமுலைப் போகமின்றி
ஆரிடர்நிலைமை தன்னை யடைந்தனர் அளக்கர்சூழ்ந்த
பாரிடையுயிரும் காமப் பற்றுவிட் டிருந்த வன்றே. (க)

ஆரணன் தனது மைந்தர்க் கரும்பெறன் ஞானபோதம்
ஓரிறை காட்டு முன்னர் உலகெலாம் ஒருப்பாடொன்றி
யீருடல் முயங்கும் ஆர்வமின்றியே யிருந்த யார்க்கும்
காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற் பாற்றோ. (உ)
(கந்தபுராணம்)

இனி, உமை, கேள்வன் கோவை முகிழ்த்த தன்மையென்று கொண்டு உமாதேவி பரமனது திருக்கண்களைப் புதைத்தபொழுது நிகழ்ந்ததையும் கொள்ளலாம். அது வருமாறு:—

பண்டொரு காலத்தில் பரமனும் பார்வதியும் ஓர் ஆதனத்தில் எழுந்தருளியிருந்தனர். அப்பொழுது இனிய பலமொழிகள் இடையே நிகழ்ந்தன. முடிவில் அம்மையார் ஐயனை நோக்கி, "தேவே! சூரியனும் சந்திரனும் தேவரீருக்குத் திருக்கண்களாக அமைந்துள்ளன என்று தத்துவநூல்கள் சாற்றுகின்றனவே அஃதுண்மைதானோ?" என்று புன்னகையோடு வினவினார். இறைவன் உள்ளதுதான் என்றார். பகலொளியும், இரவொளியும் தேவரீரது விழியொளிகளாகவா விளங்குகின்றன என்று வியந்தார்; மகிழ்ந்தார். உடனே விநோதமாக அம்மையார் ஐயன் திருக்கண்களைப் புதைத்தார். உலகமுழுதும் இருண்டது. உயிர்க

ளெல்லாம் இருளில் மருள் அடைந்தன. திடீர் என்று பயந்து அம்மையார் கையை யெடுத்தார். உடனே வையமெங்கும் வான் ஒளி பரந்தது. மருண்ட உயிர்களும் தெருண்டெழுந்தன. இவ்வுண்மை பின்வரும் கவிகளில் இனிது தோன்றும்.

ஈசனார் விழி புதைத்தலும் இருட்பிழம் புருக்கிப்
பூசினாலென இருண்டன திசைகளும் புவியும்
மாசில்நீலமால் வரையெனக் கருகின மலைகள்
காசுலாவிய நதியெலாம் யமுனைபோற் கறுத்த. (க)

மறையவனும் நாரணனும் முனிவர்களும் வசுக்களும் நான் மறையும் வானோர்
இறையவனும் விழியொளிபோய்ப் பிறவிநெடுங் குருடரென இருந்தார் மற்றைக்
கறவைநிரை முதல்விலங்கு பறவைகளும் ஒளியிழந்த கண்ண வான
துறவறமும் பிறவறமும் தொலைந்தன மற்றுளதொழிலும் தொலைந்த தன்றே. (உ)

அஞ்சலென அமைத்தகரத் திருவனுதல் விழிதிறந்தான் அவனி ஏழும்
துஞ்சுமிருள் அகன்றதுபன் னிருகோடி சூரியர்தந் தோற்றம் போல
வஞ்சியுமை இறைவன்விழி புதைத்ததிருக் கரமலரை வாங்கி நின்றாள்
விஞ்சுமறை யவர்வளர்க்கும் கனல்போல விழிமூன்றும் விளங்கிற் றன்றே. (அருணாசலப்புராணம்)

இனி, கோ என்பதற்கு அரசன் என்று பொருள்கொண்டு அருச்சுனனையும், பாண்டியனையும் கொள்ளலாம். வில்லாலும் பிரம்பாலும் இவ்விருவரும் பரமனை அடித்தபொழுது அவ் அடி அகிலமும் பரந்துநின்றமை தெளிய நின்றது. இப்பொருளில் உமைகேள்வனை, கோ கைமுகிழ்த்த தன்மையென்று கொள்ளுக.

## அருச்சுனன் வில்லால் அடித்தகதை.

அருச்சுனன் நாடிழந்து காடுபுகுந்தபின் பாசுபதம் என்னும் உயர்கணை பெறும்பொருட்டுச் சிவபெருமானை நோக்கி அயர்வற நின்று அருந்தவஞ்செய்தான். அக்காலத்தில் அவ்வில்வீரனைக் கெடுக்கும் பொருட்டு மூகன்என்னும் அசுரனைத் துரியோதனன் ஏவினன். மாயவடிவங்கொண்டு அம்மூகன் அங்குமுனைந்து வந்தான். தன் அடியவனுக்கு அவன் இடர்செய்ய வருதலையறிந்து அருள்வள்ளலாகிய முதல்வன் ஒரு வேடவடிவங்கொண்டு வில்லும் கையுமாய் அங்கு விரைந்துமேவிப் பன்றிவடிவாய் வந்த அவன்மீது ஓர் பகழியை ஏவினன். விசயனும் முன்னதாக ஒருகணையை விசையுடன் விடுத்து அதனைவீழ்த்தினன். "என் வேட்டையில் வந்தது; நானே அடித்தேன்; எனக்கே உரியது; உனக்கு இதில் என்ன உரிமை?" என்று வள்ளல் வல்வழக்காடினன். அவ் ஆடலைக்கண்டு அவ் வில்லாளிநகைத்து,

"எனக்கருந்தவம் முயறலாலுதிர் சருகலா துணவில்லையால், உனக்கும் உன்படை வேடருக்கும் நல் உண்டியாம் இதுகொண்டுபோ" என்று குறித்துநின்றான். நின்றும் ஐயன் நில்லாமல் "என் குறிப்பில் நின்றதை நீ எப்படி எய்யலாம்? நான்தான் வென்றேன் என்று நாணா நீ சொல்லிக் கொள்ளவா? நின் எண்ணம் நன்று! நன்று! உன் நிலைஎன்ன? இப்பொழுது நீ செய்தசெயல் என்ன? "நின்றுபெருந் தவமுயல்வோர் தாங்கள் கொண்ட நினைவொழியப் புறத்தொன்று நினைவரோ? சொல், பொன்றிடினும் நீயறியப் பசுத்தோல்போர்த்துப் புலிப்பாய்ச்சல் பாய்வரோ? புரிவிலாதாய்" என்று மேலும் மேலும் எதிர்ந்து வாதுக்கு இழுத்தான். அருள்நலங்கனிய இவ்வாறு முதிர்ந்து நிகழ்ந்த வாதத்தில் அப்பெருமானை இனந்தெரியாமல் சினந்து அவன் வில்லால் அடித்தான். அவ் அடி உலகமெங்கும் உடனே சென்று செறிந்தது. இதனை வில்லியாழ்வார் சொல்லியுள்ள இன்கவிகளால் நன்கு காணலாம். அடியில் வருவன காண்க.

வேதம் அடியுண்டன; விரிந்தபல ஆகம
விதங்கள் அடியுண்டன; ஒரைம்

பூதம் அடியுண்டன; விநாழிகை முதற் புகல்செய்
பொருளோடு சலிப்பில் பொருளின்
பேதம் அடியுண்டன; பிறப்பிலி இறப்பிலி
பிறங்கல் அரசன்றன் மகளார்
நாதன் அமலன் சமரவேட வடிவங்கொடு
நரன்கை யடியுண்ட பொழுதே. (க)

விண்ணிலுறை வானவரில் யாரடி படாதவர்?
விரிஞ்சன் முதலோர் உததிசூழ்
மண்ணிலுறை மானவரில் யாரடி படாதவர்?
மனுக்கள் முதலோர்கள் அதலக்
கண்ணிலுறை நாகர்களில் யாரடி படாதவர்கள்?
கட்செவி மகீபன் முதலோர்
எண்ணில் பலயோனியிலும் யாவடி படாதன?
இருந்துழி யிருந்துழியரோ. (பாரதம்) (உ)

## பாண்டியன் பிரம்பால் அடித்த கதை.

முன்னொரு காலத்தில், வைகை நதியில் பெருவெள்ளந் தோன்றி யிருகரைகளையும் உடைத்துச் சென்றது பாண்டிய மன்னன் ஏவலால் மதுரை நகர்வாசிகள் எல்லாரும் அக்கரைகளை ஒழுங்குபடுத்தச் சென்றனர். அந்நகரில் பிட்டு விற்று வரும் நரை மூதாட்டி ஒருத்தி யிருந்தாள். அவள் பங்குக்கு ஆள் வரவில்லை. அதனால் அவள் வருந்தினாள். அருள்வள்ளலாகிய பரமன் அவளது நடுக்கத்தைத் தீர்க்கத்துணிந்தார். ஒரு கூலியாள்போல் வடிவங் கொண்டார். அவளிடம் வந்தார். கூலிக்காகக் கொஞ்சம் பிட்டு வாங்கினார். தின்றார். அவள்பங்கின் கரையை அடைக்கச்சென்றார். சென்றவர் உள்ளபடி வேலை செய்யவில்லை. செய்வது போல் நடித்தார். அங்கும் இங்கும் அலைந்துநின்றார். இந்நிலையைத் தானைத்தலைவர்கள் அறிந்தார். அரசனுக்கு அறிவித்தார். அரசன் சினந்தான். விரைந்து வந்து ஐயன்முதுகில் பிரம்பால் அடித்தான். அவ் அடி உலகமெங்கும் ஒருங்கேபட்டது. இவ்வுண்மை யிதன் அடியில் வருகின்ற கவிகளால் இனிது தெளிவாம்.

வள்ளல்தன் கோபங்கண்ட மாறுகோற் கையர்அஞ்சித்
தள்ளருஞ் சினத்தராகித் தடக்கைதொட் டீர்த்துப்பற்றி
உள்ளொடு புறங்கீழ் மேலா யுயிர்தொறும் ஒளித்து நின்ற
கள்வனை யிவன்றான் வந்தி யாளெனக் காட்டிநின்றார். (க)

கண்டனன் கனன்றுவேந்தன் கையிற்பொற் பிரம்புவாங்கி
அண்டமும் அளவிலாத வுயிர்களும் ஆகமாகக்
கொண்டவன் முதுகில்வீசிப் புடைத்தனன் கூடையோடு
மண்டனை யுடைப்பிற்கொட்டி மறைந்தனன் நிறைந்தசோதி. (உ)

பாண்டியன் முதுகிற்பட்டது; செழியன்
பன்னியர் உடம்பினிற் பட்டது;
ஆண்டகை அமைச்சர் மேனிமேற்பட்டது;
அரசிளங் குமரர்மேற் பட்டது;
ஈண்டிய கழற்கால் வீரர்மேற்பட்டது;
இவுளிமேற் பட்டது; பருமம்
பூண்டவெங் கரிமேற்பட்டது; எவ்வுயிர்க்கும்
போதன்மேற் பட்ட அத்தழும்பு. (௩)

பரிதியும் மதியும் பாம்பும் ஐங்கோளும்
பன்னிறம் படைத்த நாண்மீனும்
இருநிலம் புனல்கால் எரிகடுங் கனல்வான்
என்னும் ஐம்பூதமுங் காரும்
சுருதியும் ஆறு சமய வானவரும்
சுரர்களும் முனிவரும் தொண்டின்
மருவிய முனிவர் கணங்களும் பட்ட
மதுரை நாயக னடித்தழும்பு. (ச)

வானவர் மனிதர் நாகர் புள்விலங்கு
மாசுணஞ் சிதல் எறும் பாதி
யானபல் சரமும், மலைமரம் கொடிபுல்
ஆதியாம் அசரமும், பட்ட;
ஊனடை கருவும் பட்டன; தழும்போடு
உதித்தன; வுயிரில் ஓவியமும்
தானடி பட்ட சராசர சடங்கள் தமக்கு
உயி ராயினோன் தழும்பு. (ரு)

துண்ணென மாயோன் விழித்தனன்; கமலச்
சோதியும் யாதென வியந்தான்;
விண்ணவர் பெருமான் வெருவினன்; வானோர்
வேறுளார் மெய்பனிப் படைந்தார்,
வண்ணயாழியக்கர் சித்தர் சாரணர்தம் வடுப்படா
உடம்பினிற் பட்ட
புண்ணையாதென்று தத்தமிற் காட்டி மயங்கினார்
புகுந்தவா றறியார். (திருவிளையாடற்புராணம்)

இன்னவாறே உலக முதல்வனென இப்பரமனது தன்மையைப் பல நூல்களும் பலபடியாக உணர்த்தியுள்ளன.

இவ்வெல்லாவற்றாலும் கடவுள் ஒருவர் உளர் என்பதும், அவர் அகரம்போல் உலகு உயிர் எங்கும்ஒழிவற நிறைந்த ஒண் பொருள் என்பதும் தெளியப்படும்.

உட்புலனால் நோக்கின் ஒருபொருளுண் டிவ்வுலகம்
கட்புலனுக் காட்டிநிற்கும் காண்.

கடவுளது உண்மையும் தன்மையும் இச்செய்யுளால் கூறப்பட்டன.

கற்றறிந்தும் தாருவனர் கல்விநலம் எய்தாமல்
குற்றமுற்றார் என்னே குமரேசா—வெற்றிபெறக்
கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். (உ)

ள.

குமரேசா! தாருவனர் கற்றும் அறிவுற்றிருந்தும் கல்வி நலத்தை அடையாமல் ஏன் குற்றமுற்றார்? எனின், வாலறிவன் நல்தாள் தொழார் எனின் கற்றதனால் ஆய பயன் இல்லை என்க.

இது, கடவுளைத் தொழுதலே கல்விக்குப் பயனும் என்கின்றது. வெற்றிபெறஎன்றது வெல்லாமல் எவரையும் வெருட்டிவிட வல்லராய்க் கல்வியில் விளங்கியிருந்தாலும் இறைவன் அருளுக்கு இணங்கி நில்லாராயின் அவர் கல்வி விளங்காது என்பது விளங்க என்க. வாலறிவு—மெய்யுணர்வு. அதனை இயல்பாகவே யுடையவன் என்பார் வாலறிவன் என்றார். தொழுவார்க்குத் துன்ப நீக்கமும், இன்பப்பேறும் நல்கும் நலங்கருதி நற்றாள் என்றார்.

என் என்னும் வினு இன்மைகுறித்து நின்றது. வேறுபயன் ஒன்றும் இல்லைஎன்பது தெளிந்த உண்மையாதலால் அது விளங்க இங்ஙனம் வினவியருளினர். கொல் என்னும் இடைச்சொல் ஒரு பொருளையும் குறியாது ஈண்டு அசை நிலையாய் அமர்ந்ததாயி னும் இசை அமையநின்றது. தாள் என்றது தொழநின்ற அப்பொருளின் தலைமையும், தொழுவார்தம் நிலைமையும் தோன்ற. அன்பும் பணிவுடைமையும் அமைய இது கூறியதென்க. அளபெடை செய்யுளிசை நிறைக்கவந்தது.

மேல், கடவுள் உண்மைகூறினர்; இதில், அவர் நன்மையை உணர்த்தி அவர் தாளை வணங்கவேண்டும் என்கின்றார்.

மெய்யறிவினையுடைய கடவுளது நல்ல தாள்களை வணங்கா ராயின் அவர் கல்வி அறிவால் யாதும் பயன் இல்லை என்பதாம்.

ஒருவனது அறிவுடைமைக்குப் பயன் அறிவு வடிவமாய் விளங்கும் பரமனது அடிமலரை நினைந்து வணங்குதலேயா மென்பது கருத்து.

இறைவன் மெய்யறிவுடையான் என்பதும், தன்னைத்தொழு வார்க்கு அழிவில்லாத இன்பத்தை அருளுவான் என்பதும், கல்வி யறிவுடையார் எவரும் அவனது அடிகளைத் தொழுதல்வேண்டும் என்பதும், தொழவில்லையானல் அவ்வறிவாற் பயனில்லை என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை தாருவனர் பால் உணரப் படும்.

## கதை.

பூர்வகாலத்தில் இமயமலையருகில் தாருகம் என்றொரு வனம் இருந்தது. அதில் முனிவர் பலர் வாசஞ்செய்திருந்தனர். இவர் யோகநெறிகளில் மிகத்தேர்ந்தவர். நூல்பலகற்று நுண் ணறிவுபெற்று மேன்மையுற்று விளங்கி நின்றனர். தாம் செய் கின்ற வேள்விமுதலிய நல்லகருமங்களே கருதியபயன்கள் எவற் றையும் தருமென்று உறுதியாகத் துணிந்தனர். அதனுல் மற் றொரு கடவுளை வழிபடல் வேண்டாமென்று மனச்செருக்குற்று மதியாதிருந்தனர். இங்ஙனம் இருந்த இவர்களை உய்விக்கும்

பொருட்டு கண்ணுதற்பரமன் எண்ணினார். கண்டார் எவரும் காதல் கொள்ளத் தக்க ஒரு புருடவேடந்தாங்கினார். திருமாலை மோகினி வடிவெடுத்து உடன்வரச் செய்தார். அவ்வனத்தில் புகுந்தார். அம்முனிவரையும் அவர்தம் பத்தினிமார்களையும் நிலைகுலைத்து அவர் கொண்டிருந்த செருக்கை அகற்றித் தெளிவித்தார். அவரும் தெளிந்தார். தங்கள் சிறுமையை உணர்ந்தார். இறைவனது பெருமையை எண்ணினார். முன்னர் அறியாதிருந்தமையை நினைந்து வருந்தினார். பின்னர் நற்றாள் தொழுதார். நற்பயன்பெற்றார். முற்று முணர்ந்து குற்றமற்று நின்று பற்றற்றுவிளங்கும் ஒப்பற்ற ஒருவன் பொற்றாள்வணங்கலே கற்றதனாற் பயனென்பதை இவர் காட்டிநின்றார். விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

வாய்படைத்தும் மாந்தரந்த வல்லானை வாழ்த்தாரேல்
நோய்படைத்தார் நின்றழுவார் நொந்து.

வாலறிவனைத் தொழுதலே நூலறிவுக்குப் பயன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

நீடியவாழ் வெய்தி நிலமிசையேன் மார்க்கண்டர்
கூடினார்பே ரின்பம் குமரேசா—நாடி
மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (௩)

இ—ள்.

குமரேசா! மார்க்கண்டர் நீடியவாழ்வையும் பேரின்பத்தையும் ஏன் கூடினார்? எனின், மலர்மிசை ஏகினான் மாண் அடிசேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார் என்க.

இது, கடவுளை நினைவார் உயர்பயனடைவார் என்கின்றது. மலர் என்றது இங்கு மனமாகிய தாமரையை. மனம் தாமரை போன்ற வடிவினையுடையதென்பது தத்துவநூலார் துணிபு ஆதலால் இங்ஙனம் இது சாற்றநின்றது. இதனை “உள்ளக்கமலம்” என்று குலபதிநாயனாரும் கூறியுள்ளார்.

அன்பர்களது நெஞ்சத்தாமரையில் அவர் நினைந்தவடிவோடு போய் இறைவன் அமைந்து நிற்பன் ஆதலால் மலர்மிசைஏகினான் என்றார்.

"அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற் றைம்புலனும் அடக்கி ஞானப், புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத்துள்ளிருக்கும் புராணர்" எனத்திருஞானச் சம்பந்தப்பெருமான் அருளியுள்ளமை காண்க.

சேர்ந்தாரை நீடுவாழச்செய்யும் சிறப்புநோக்கி மாண் அடி என்றார். உரு உடம்பால் இத்திருவடியைச் சேர இயலாதாதலின் சேர்தல் என்றது இங்கு நினைத்தல் என்னும் பொருளைக் குறித்து நின்றது.

மேல், கடவுளடியைத் தொழவேண்டும் என்றார்; இதில் அங்ஙனம் தொழுவார் பெருவாழ்வை யடைவர் என்கின்றார்.

அன்பரது உள்ளத்தாமரையில் உவந்திருக்கும் பரமனது மாட்சிமைப்பட்ட திருவடிகளை நினைந்து நின்றவர், உயர்ந்த பதத்தை யடைந்து என்றும் சிறந்து வாழ்வார் என்பதாம்.

அன்போடு நினைப்பவரது நெஞ்சத்தில் இறைவன் இன்போடு எழுந்தருளி யிருப்பன் என்பதும், அவனது அடிகளைச் சேர்ந்தவர் அழியாவாழ்வும் கழியா இன்பமும் பெறுவர் என்பதும் இதில் காட்டப்பட்டன. இவ்வுண்மை மார்க்கண்டர்பால் காணப்படும்.

## கதை

ஆதியூழியில் கடக நகரத்தில் குச்சகன் மரபில் மிருகண்டு என்னும் முனிவர் ஒருவர் இருந்தார். அவர் மருத்துவதி யென்னும் உத்தமியை மணந்து இல்லறம் புரிந்து இன்புடன் வாழ்ந்தார். பொறையும் அருளும் பூண்டொழுகி சிறந்தார். நூலறிவுடனே சீலமும் வாய்ந்தார். ஆயினும் மகப்பேறு இன்மையால் மனமிக மெலிந்தார். இறைவனை நோக்கி யருந்தவஞ் செய்தார். அருளுடைப் பரமனும் இவர் தம் அன்புக்கிரங்கி இன்புறத் தோன்றி எதிருறநின்று அருந்தவ,

தீங்குறு குணமே மிக்குச் சிறிதுமெய் யுணர்விலாமல்
மூங்கையும் வெதிருமாகி முடமுமாய் விழியுமின்றி
யோங்கிய ஆண்டுநூறும் உறுபிணி யுழப்போனாகி
யீங்கொரு புதல்வன் றன்னை யீதுமோ? மாதவத்தோய்!

அல்லது

கோலமெய் வனப்புமிக்குக் குறைவிலா வடிவமெய்தி
யேலுறு பிணிகள்இன்றி யெமக்கும் அன்புடையோனுகிக்
காலம் எண்ணிரண்டே பெற்றுக் கலைபல பயின்றுவல்ல
பாலனைத்தருதுமோ நின்எண்ணம் என்? பகர்தி என்ருன்.

இறைவன் அருளிய இத் திரு மொழிகளைக் கேட்ட மிரு கண்டுமுனிவர் சிறிதுபொழுது சிந்தித்தார். பின் அந்திவண்ணனை வந்தித்தார். ஆயுள் சிறிதுடையனுயினும் அறிவு பெரிதுடையனே எனக்கு வேண்டுமென வேண்டினுர். அங்ஙனமேயருள அருமை யான ஆண்மக வொன்று இவர் மனைவிபால் வந்துதித்தது மார்க்கண்டேயன் என்று அம்மகவுக்குப் பெயரிட்டனர். பிறை யென நாளும் பெருகி வளர்ந்தது. வளர்ச்சியில் மகிழ்ச்சியுற்றி ருந்த பெற்ருேர் இப் புதல்வனுக்கு வயது பதினுறே யென்று இறைவனருளியிருந்த உண்மையை யெண்ணியெண்ணி வருந்தி னர். மகனும் வளர வளர இவர்மனத்தில் வருத்தமும் கிளைத்து வளர்ந்தது. பெற்ருேர் கவலையைக் குறிப்பாலுணர்ந்த இம் மகன் உண்மையை வினவியோர்ந்தான். தாயையும் தந்தையையும் தேற்றினுன். தவத்தால் எவற்றையும் பெறலாமென்று துணிந் தான். மணிகர்ணிகையை யடைந்தான். பெருமானை நினைந்து பெருந்தவஞ் செய்திருந்தான். காலனும் காலம் பார்த்து இப் பாலன்பால் வந்தான். அழைத்தான். அதட்டினுன். வெகுண்டான். விரைந்தான். மருட்டினுன். வெருட்டினுன். பாலன் ஒன்றுக்கும் அஞ்சவில்லை. முடிவில் காலன் பாசத்தால் பாலனை யீர்த்தான். உடனே பரமன் தோன்றிப் பாலனைக்காத்துக் காலனை வீழ்த்தினுர். இத் தவப் புதல்வனுக்கு முன்னர் யாம் தந்தவயது பதினுறு என் றெண்ணற்க. "என்றும் பதினுறென்றே யெண்ணுக" என்று திரு வருள் செய்து காலனையும் மகிழ்வித்து மறைந்தார். மார்க்கண்டே யரும் அழியாவாழ்வு பெற்று ஆனந்தம் அடைந்தார். இதன் விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

மார்க்கண்டர் தமக்குக் கருவிலே யமைந்த பதினுறுவயதை இறைவன் அருளால் என்றும் பதினுருகப் பெற்று இன்றும் வாழ்ந்து வருதல் தேற்றம்.

நீத்த னடியை நினைவார் துயர்நீங்கி
நித்தராய் வாழ்வர் நிலத்து.

இறைவன் அடிசேர்ந்தார் நெடிது வாழ்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

எள்ளிச் சமணர் இடும்பைசெய்தும் அப்பரேன்
கொள்ளவில்லை துன்பம் குமரேசா—உள்ளியொன்றை
வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை யில. (ச)

இ—ள்.

**குமரேசா!** சமணர்கள் இகழ்ந்து இடும்பைகளைச்செய்திருந்தும் அத்துன்பங்களை ஏன் அப்பர் அடையவில்லை? எனின் வேண்டுதல் வேண்டாமை இலான் அடிசேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல என்க.

இது, முன்பனை நினைந்தால் துன்பம் நீங்கும் என்கின்றது.

வேண்டுதல் = விரும்புதல். வேண்டாமை = விரும்பாமை.

எல்லாமுடையானை இலான் எனச் சுட்டி அவனது பரத்துவ சமத்துவத்தை இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

இல்லா னடிசேர்ந்தார் யாண்டும் இடும்பைஇலர் எனவும் பாடம்.

விருப்பும் வெறுப்பும் இல்லாதானது அடிகளைக் கனிந்த அன்போடு நினைந்திருப்பார்க்குத் துன்பங்கள் என்றும் உளவாகா என்பதாம்.

இறைவன், துன்பம் தொடர்வறுத்த சோதியானதலால் அவனது அடியைச் சேர்ந்தார்க்கு அவை இலவாயின என்க.

எக்காலத்தும், எவ்விடத்தும், எவரானும், எவற்றானும், எவ்வகையானும் என்பார் யாண்டும் என்றார். இடும்பை = துன்பங்கள். அவை தன்னால் வருவன, பிறரால் வருவன, தெய்வத்தால்வருவன, என மூவகைப்படும். இவற்றைத் தாபத்திரயம் என்பர். வேண்டியபொருள் எய்தாவிடினும் துன்பம்; வேண்டாதன எய்தினும் துன்பம். ஆதலால் விழைவும் வெறுப்பும்

துன்பங்கட் கேதுவாயின; இதனால் ஒருயிர்க்கு இருவகையேது வான் மூவகைத்துன்பங்கள் வருமென்பது தெளிவாம்.

எல்லாம் அறிந்து எங்கும் நிறைந்து என்றுமுள்ள பரம்பொருள் விழைதற்கும் வெறுத்தற்கும் உரியதொரு பொருள் ஒன்றும் இன்மையால் அப்பரம் பொருளுக்கு வேண்டுதல் வேண்டாமை யிலான் என்று பெயரிட்டனர்.

கடவுள் விருப்பும் வெறுப்பும் இல்லாதவர் என்பதும், அவரது திருவடிகளைச் சேர்ந்தாரைத் துன்பங்கள் சேரா என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை அப்பர்பால் உணரப்படும்.

## கதை

அப்பர் என்பார் சைவசமய குரவர் நால்வருள் ஒருவர். இவர் திருமுனைப்பாடி நாட்டிலே திருவாமூரிலே, வேளாளர்குலத்திலே, கொறுக்கையர் குடியிலே தோன்றியிருந்த புகழனாருக்கும் மாதினியாருக்கும் புதல்வராய்த் தோன்றினர். இளமைப்பருவத்திலேயே பல கலைகளையும் வழுவறக் கற்றார். அதன்பின் சமணமதத்தைச் சார்ந்தார். அம் மதநூல்கள் பலவற்றையும் ஆய்ந்தார் புலமையும் போதனு சத்தியும் வாய்ந்தார். இவரது பெருமையைக் கண்ட சமணர்கள் இவரைத் தங்கள் மதத்துக்குத் தலைவராக்கித் தருமசேனர் என்ற பட்டமும் தந்து வழிபட்டு வந்தார். மருணீக்கியார் என்பதுதான் இவரது பிள்ளைத்திருநாமம். இங்ஙனம் இருப்ப, இவருடன் பிறந்த திலகவதியார் என்னும் அம்மையார் தமது தம்பி சமணமதபோதகனாய் நின்று வரும் நிலைமையை நினைந்து மிகவும் வருந்தினர். தாம் எழுந்தருளியிருந்த திருவதிகைவீரட்டானத்துச் சிவபெருமானை வணங்கித் தம்பி சமணமதத்தைக் கைவிட்டுச் சைவமதத்தைச் சாரவேண்டுமென்று மனமுருகி வேண்டினர். பெருமானும் அவ்வம்மையார் வேண்டுகோட்கிரங்கித் தருமசேனரைச் சூலைநோயால் வருத்தி யாட்கொண்டார். சைவமதத்தை இவர் சார்ந்தமையைச் சமணர்கள் அறிந்தனர். உடனே வெகுண்டு திரண்டார். தமது மதம் இனி நிலைகுலையுமென மருண்டார். அக்காலத்தில் தங்கள் மதத்தைத் தழுவியிருந்த பல்லவராசனை வந்து கண்டார். அவன்பால் உற்றதை முற்றும் ஒழியாதுரைத்தார். அடங்காக் கோபம் அவனும் அடை

ந்தான். அவனது உதவியால் நமது அப்பருக்குச் செப்புதற்கரிய பெருந்துன்பங்களைச் சமணர்கள் துணிந்து செய்தனர். முதலில் யானையை மேலே ஓட்டினர், நஞ்சை யுள்ளே யூட்டினர். நீற்ற றையில் ஆழ்த்தினர், கல்லுடன் பிணித்துக் கடலில் வீழ்த்தினர். இன்னும் பலவே இவர் செய்தஇடும்பைகள். இவற்றால் ஒரு சிறிது துன்பமும் நமது நாயனார் அடைந்திலர். மகிழ்ச்சியும் இன்பமும் மாறாதிருந்தனர். மண்டியெரிகின்ற நீற்றறையினுள்ளே தள்ளி யேழுநாளளவும் மூடப்பட்டிருந்தனர். அதில் தமது ஐம்புலன் களும் அளவில் இன்பத்தை யனுபவித்தன. இவ்வுண்மையை நமது அப்பர் அப்பொழுது செப்பிய அருமைத் திருவிருத்தம் தெளிவுறுத்து கின்றது:—

மாசில் வீணையும், மாலை மதியமும்,
வீசு தென்றலும், வீங்கிள வேனிலும்,
மூசு வண்டறை பொய்கையும், போன்றதே
யீசன் எந்தை யிணையடி நீழலே. (தேவாரம்)

இறைவன் அடிசேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பையில என் னும் உண்மையை யிப்புனித வாக்கால் நாம் இனிதுணர்கின் றோம். இதன் விரிவைப் பெரியபுராணத்தில் காண்க.

இன்ப வடிவன் இணையடியை எண்ணினோர்
இன்ப மடைவர் இனிது.

இறைவனது அடிகளைச் சேர்ந்தாரை இடும்பைகள் சேரா என்பது இதனால் கூறப்பட்டது.

வாட்புலிபோற் பாய்ந்துகொன்ற வல்வினையேன் சேரவில்லை.
கோட்புலியார் தம்மைக் குமரேசா —கேட்பின்
இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. (ரு)

இ—ள்.

குமரேசா! கோட்புலிநாயனார் புலிபோல் பாய்ந்து தமது சுற்றத்தாரைக் கொன்றிருந்தும் அக்கொலைவினை ஏன் அவரைச் சேரவில்லை? எனின், இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு இருள்சேர் இருவினையும் சேரா என்க.

இது, முனைவனை நினைந்தால் வினைகள் நீங்கும் என்கின்றது.

புகழ் புரிந்தார் = புகழை விரும்பி நின்றார். மாட்டு = இடத்து. புரிதல் = விரும்புதல். எப்பொழுதும் உள்ளிநிற்றல், உவந்துரை யாடல் என்க. வினைகள் மயக்கத்தால் வரும் என்பார் இருள்சேர் வினை என்றார். உண்மையான புகழ் என்பார் பொருள்சேர் புகழ் என்றார்.

இருவினை = நல்வினை, தீவினை. இந்த இரண்டு வினைகளும் மூன்று கரணங்களின் வழியாக உளவாம். நினைத்தல் சொல்லல் செய்தல் என்னும் இம் மனம் வாக்கு காயங்களின் தொழில்கள் நல்லனவாயின் நல்வினையாம். தீயனவாயின் தீவினையாம். நல் வினை இன்பத்தை நல்கும்; தீவினை துன்பத்திற்கு ஏதுவாம். துற க்க முதலிய சிறந்த போகங்களை யூட்டி உயிர்களைப் பேரின்பத்தைப் பெற வொட்டாதபடி தடுத்தலினால் நல்வினையும் சேராதென்றார்.

இறைவனது உண்மையான புகழை எப்பொழுதும் விரும்பி நிற்பாரிடத்து அறியாமையாலமைந்துள்ள இருவினைகளும் அணுகா என்பதாம்.

இறைவன் மெய்ப்புகழுடையான் என்பதும், அவனது கலி யாண குணங்களை விரும்பித் துதித்தல் வேண்டும் என்பதும், அங் ஙனம் துதிப்போரை வினைகள் சேரா என்பதும் இதில் உணர்த் தப்பட்டன. இவ்வுண்மை கோட்புலி நாயனாரிடம் உணரப்படும்.

## கதை

கோட்புலிநாயனார் என்பவர் அறுபத்து மூன்று நாயன்மார் களில் ஒருவர். இவர் சோழ நாட்டிலே வேளாளர் குலத்திலே நாட்டியத்தான் குடியிலே பிறந்தவர். சிவபத்தியிற் சிறந்தவர். அஞ்சா நெஞ்சும் எஞ்சாவலிமையும் வாய்ந்தவர். வாள்வேல் முத லிய ஆயுதப்பயிற்சியில் தேர்ந்தவர். அந்நாட்டு அரசனிடத்தில் சேனைத்தலைவரா யமர்ந்திருந்தார். தாம் ஈட்டிய பெரும் பொரு ளைச் சிவாலயங்களுக்கும் சிவனடியார்க்குமே மகிழ்ந்து உதவி வந்தார். இங்ஙனம் வருநாளில் பொருபடை கொண்டு ஒரு போர் முனைக்குப் போகும்படி அரசன் இவரை ஏவினான். போர்மேற் சென்று மீண்டு வருகின்றவரையும் சிவாலயங்களுக்குச் செவ்வை

யாகத் திருவமுது செய்யும்படி திட்டஞ் செய்தார். அதன்பொருட்டு வேண்டிய நெல்லைத் தொகுத்தார். சேமஞ்செய்தார். தமது சுற்றத்தரை யழைத்தார். எவ்விதமான காரணத்தாலும் இந்நெற்பொதியில் சிறிதும் எடுத்தலாகாது என்று அவர்கட்குக் கட்டளையிட்டார். அரசன் கட்டளைப்படி தாமும் போர்மேற் போனார். போனவர் பகைவரைப் பொருதுடன் வென்றார். வெற்றியும் புகழும் முற்றவும் பெற்றார். இவர் சென்றிருந்த சிலகாலத்துள் தமது நாட்டிற் பஞ்சந் தோன்றிற்று. அதனால் இவரது பெற்றோரும் சுற்றத்தாரும் சேமஞ்செய்திருந்த நெல்பொதியிற் சிறிதெடுத்துச் சீவித்திருந்தனர். வெற்றிபெற்று மீண்டுவந்த நாயனார் ஆண்டு நிகழ்ந்ததைக் கேட்டறிந்தார். கொண்டார் கோபம். எடுத்தார் வாளை. தமது மனைவி முதலிய சுற்றத்தார் அனைவரையும் வாளால் வீசித் துணித்தார். இறுதியில் அங்கோர் இளங் குழவியையும் வெட்டச் சினந்தார். அதுகண்ட சிலர் நடு நடுங்கி "ஐயா! இப் பசிய பாலன் நமது நெல்லின் அன்னத்தை யுண்ணவில்லையே' என வேண்டினார். இக்குழவி யெனது நெல்லின் அன்னத்தை உண்ணவில்லை யென்ப துண்மை; ஆனாலும் அவ்வன்னத்தை உண்ட தாயின்பாலை உண்டிருக்கு மல்லவா? என்று மொழிந்து பாலனை மேலே வீசி எறிந்தார். தமதுவாளால் கூசாது அரிந்தார். உடனே பரமன் இவரது திடபத்தியைக்கண்டு வியந்து மகிழ்ந்தார் காட்சி தந்து கருணைசெய்தார். அன்பனே! உனது வாளால் மடிந்த உன் சுற்றத்தாரனைவரும் துறக்க இன்பந்துய்க்கின்றனர். நம் பால்வைத்த உனது அன்பிற்கு யாம் அகமிக மகிழ்ந்தோம். நீயும் பெறுக பேரின்பம் என்று பெருமான் அருளினார். நாயனாரும் இருவினை நீங்கினார். இன்பம் எய்தினார். இதன் விரிவு பெரிய புராணத்தில் காணப்படும்.

ஆண்டவனை நாடி அகமுருகின் அப்பொழுதே
பூண்டவினை மாண்டொழிந்து போம்.

இறைவனது அருள் சேர்ந்தாரை யிருவினைகளை சேரா என்பது இதனால் கூறப்பட்டது.

நாடி நெறிநின்ற நல்லசன காதியரேன்
கூடினர்நீள் வாழ்வைக் குமரேசா—ஓடும்
பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். (ரு)

இ—ள்.

குமரேசா! சனகர் முதலிய நால்வரும் என்றும் அழியாத வாழ்வை ஏன் எய்தினார்? எனின், பொறிவாயில் ஐந்து அவித்தான் பொய்தீர் ஒழுக்கநெறி நின்றார் நீடுவாழ்வார் என்க.

இது, இறைவனருள்வழி ஒழுகினார் அழியாவாழ்வை அடைவர் என்கின்றது.

சனகாதியர் என்றது சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனாதனர் என்னும் முனிவர் நால்வரை.

பொறி என்றது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து ஞான இந்திரியங்களை. ஐந்து என்றது ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் ஐம்புலன்களாகிய இச்சைகளை.

பொறிகளின் வழியாகச் சென்று சத்தம் பரிசம் முதலிய புலன்களை நாடியலையும் புன்மை இறைவனுக்கு இன்மையால் "பொறி வாயில் ஐந்து அவித்தான்" என்றார். அவித்தவித்தை உருவுடன் காணப்படும்; ஆனால் முளைக்காது. அதுபோல் பொறிகள் இருக்கும்; புலன்களைப் பற்றா என்பதாம்.

ஐம்பொறிகளின் வழியாக வரும் அவா ஐந்தையும் ஒழித்தானது மெய்யான ஒழுக்க நெறியின் கண்ணே வழுவாது நின்றவர் என்றும் பிறப்பின்றி இன்புற்று வாழ்வர் என்பதாம்.

பரமனது அருள் நெறியின் கண்ணே வழுவற அமர்ந்து ஒழுகி நின்றவர் அழிவில்லாத விழுமியவாழ்வை எய்தி என்றும் விளங்கி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சனகாதியர் பால் உணரப்படும்.

கதை

சனகர் முதலிய நால்வரும் பிரமனுடைய அருமைப் புதல்வர். இவர் பருவமெய்து முன்னரே அரியகலைகள் பலவும் பயின்றவர். விழுமிய விரத ஒழுக்கமுடையவர். அருந்தவர்களனைவரும் விய

ந்து நோக்கும்படியான சிறந்த ஞானசீலராய் இவர் விளங்கி யிருந்தனர். தனு கரண புவன போகங்களைக்கொண்டு உயிர்கள் பலவகைக் கதிகளிலும் நின்று மாறி மாறிச் சுழன்றுவருதலை யறிந்து பிறவியை அஞ்சி என்றும் பிறவாநெறியினைப் பெற விழைந்தார். இறைவனை நினைந்து உளமிக உருகினார்.

"இருட்பெருங் கடலுள்யாமத் தெறிமருத் திடைப்பட்டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம்புடைதொறு மலைப்பஇந்நாள்
அருட்பெருங் கடலே! எய்த்தேம்; அமைந்தில துணர்வுயாங்கள்,
மருட்பெருங் கடலினீங்கும் வண்ணமொன் றருடிஎன்றார்."
(கந்தபுராணம்.)

இங்ஙனம் உருகி வேண்டியபோது பரமன்தோன்றி உண்மை நெறியை உறுதிபெற உணர்த்தினார். இவர் உணர்ந்து தெளிந்தார். உற்ற பொருள்களில் பற்றற்று நின்றார். மனத்தைப் புறத்தில் செலுத்தாமல் பரத்திற் செலுத்தினார். அதனால் அந்தமில் இன்பத்தை அடைந்தார். சிவயோகிகள் என்னும் சிறப்பினைப் பெற்றார். நித்தியவுலகில் நீடுவாழ்வுற்றார். பொய்தீர் ஒழுக்கநெறி நின்றார் நீடுவாழ்வார் என்னும் உண்மையை இவர் நின்றுணர்த்தினார். இதன் விரிவைச் சிவமகாபுராணத்தில் காண்க.

**உண்மை நெறிநின் றொழுகின் உயரின்பம்
எண்மையா யெய்தும் எளிது.**

இறைவனருளிய மெய்நெறி நின்றார் எய்தும் பேறு இதனால் கூறப்பட்டது.

---

வானவரேன் நஞ்சினால் வந்ததுன்ப மாற்றவுமை
கோனடியைச் சேர்ந்தார் குமரேசா—ஏனோர்
தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. (எ)

இ—ள்.

குமரேசா! நஞ்சினால் வந்த துன்பத்தை மாற்றுதற்காக வானவர் என் உமைகோன் அடியைச் சேர்ந்தார்? எனின், தனக்கு உவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால் மனக்கவலை மாற்றல் அரிது என்க.

அரிது என்பது இன்மைகுறித்து நின்றது. மாற்றமுடியாதென்றவாறு. மாற்றல் = நீக்குதல்.

ஆதியும் நடுவும் அந்தமுமின்றி அநாதியாய் அருமறைகளுக்கும் ஓதவும் எட்டாது உயர்ந்து, என்றும் நின்றான் ஒருவனேயென்பதுகருதி "தனக்குவமை யில்லாதான்" என்றார். உவமையில்லாதவன் தாளைச் சேர்ந்தவரே கவலையில்லாதவரா யிருப்பர் பிறர்க்கு அஃது உண்டு என்க. தனக்கு உவமை யில்லாதவன் தாளே மனக்கவலை மாற்றும் மருந்து என்பது கருத்து.

"ஒப்புஇல்லாதன உவமனில் இறந்தன ஒண்மலர்த்திருப்பாதத்து அப்பன்" என்றது திருவாசகம்.

தனக்கு யாரும் ஒப்பில்லாத இறைவனது திருவடியைச்சேர்ந்தவர்க்கல்லது மனக்கவலை மாற்ற முடியாதென்பதாம்.

எவ்வகையினும் எவரும் தனக்கு நிகரில்லாதவன் இறைவன் என்பதும், அவனது அடியைச்சேர்ந்தவர்க்குத் துன்பங்கள் நீங்கும் என்பதும், இதற்குச்சான்றாகத் தேவர்கள் நஞ்சினால் நேர்ந்த கவலையை இவன் தாள்சேர்ந்து நீக்கினார் என்பதும் இதில் உரைப்படும்.

கதை.

முன்னொரு காலத்தில் துருவாசரது சாபத்தால் துறக்கப் பொருள்கள் எல்லாம் கடலிடைப்புகுந்தன. அவற்றை மீண்டு பெறுதற்பொருட்டுச் சுரரும் அசுரரும் பாற்கடல் கடையத்துணிந்தார். மந்தரமலையை மத்தாகநாட்டினார். சந்திரனைத் தூணாக அமைத்தார். வாசுகியென்னும் பாம்பை நாணாகப் பிணித்தார். இருதிறத்தாரும் கடைந்தார். வலிந்தும் நலிந்தும் கடையும்பொழுது நாணாகிய வாசுகியிடமிருந்து நஞ்சு வெளிவந்தது. அப்பெரு நஞ்சு மண்டி மேல் எழுந்தது. வானவர் கண்டு பயந்தார். மருண்டு வெருண்டார். என்செய்வோமென்று திரண்டு ஓடினார். அஞ்சி ஓடிய தேவர் முடிவில் உமாபதியே தஞ்சமென்றடைந்தார், அப்பதியும், "அஞ்சன்மின்" என்று அவர்கட்கு ஆதரவு செய்து மண்டிவந்த நஞ்சை தம் செங்கையில் கொண்டார். கண்டமட்டும் உண்டார். அது கண்டம் மட்டில் நின்றது. அதனால் அவர்

நீலகண்டன் எனப் பெயர் பெற்றார். வானவர் கவலை நீங்கினார் பரமனை வாழ்த்தி மகிழ்ந்தார். முதல்வனடியை அடைந்தவர்க்கே கவலை நீங்கும் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். இதன் விரிவை இராமாவதாரத்தில் தெளிக.

அன்னையுறிற் பிள்ளை அழிபசிபோம் அல்லலெலாம்
முன்னவனைச் சேரிலறு முந்து.

உயிர்கள் மனக்கவலை மாற்றுதற்கு வழி யிதனால் கூறப்பட்டது

---

காதற் கடலைக் கடந்தான் சனகனேன்
கோதுற்றார் மற்றோர் குமரேசா—நீதில்
அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது. (அ)

இ—ள்.

**குமரேசா!** சனகன் காதற்கடலைக் கடந்தான், மற்றவரேன் அதில் ஆழ்ந்தார் எனின், அறவாழி அந்தணனது தாளைச் சேர்ந்தவர்கட் கல்லது பிற ஆழியை நீந்துதல் அரிது என்க.

பிறஎன்றது, ஈண்டு பொருளையும் இன்பத்தையும் சுட்டி நின்றது. மறத்தையும் குறிக்கும். இனி பிற ஆழி, பிறவிக்கடல் எனவும் படும். மற்றவர் என்றது சூரன், கனகன், துரியோதனன் முதலாயினோரை.

அறக்கடலாகிய இறைவன் அடியிணை நினைந்துருகி அவனருள்வழி ஒழுகினாலன்றிப் பாவக்கடலாகிய பிறவித்துன்பத்தை யாவரும் கடக்கமுடியா தென்பதாம்.

அவலக் கவலைகள் நிரம்பிய பிறவிக்கடலை நீந்தி ஒருவன் பேரின்பம் பெறவேண்டுமாயின் அவன் பரமனை எண்ணி யொழுக வேண்டும் என்பது கருத்து.

இறைவன் தருமஉருவினன் என்பதும், தண்ணளியுடையவன் என்பதும், அவனது தாளைச் சேர்ந்தவரே காதற்கடலைக் கடப்பர் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை சனக மன்னன்பால் உணரப்படும்.

## கதை.

சனகன் என்பவன் விதேசநாட்டு வேந்தன். சீதைக்குத் தாதை. தசரதராமனுக்கு மாமன். இவர் மெய்யுணர்வு மிக்கவர். இல்லற ஞானிகட்கு ஓர் எடுத்துக்காட்டாக வுள்ளவர். முற்றத் துறந்த சுகமுனிவரும் தம்மிடம் வந்து தத்துவ உபதேசம் பெறும்படி நின்ற உத்தமர். அருளும் பொறையும் அறிவும் நிறைந்தவர். மருளற நின்ற மாதவசீலர். பற்றற்ற பரமயோகி. "அறன் நிரம்பிய அருளுடை யருந்தவர்க்கேனும், பெறலருந்திருப் பெற்றபின் சிந்தனை பிரிதாம்" என்றபடி பொருட் செல்வமானது எத்தகைய பேரறிவாளரையும் மயக்கிச் செருக்கை யுண்டாக்கும் இயல்பினையுடையது. அதனை இவர் அளவறப் பெற்றும் அரசபதவியையுற்றும் அகங்காரமுதலிய இழிகுணங்கள் சிறிதும் இலராய் மறுமை நோக்கோடு மருவியிருந்தார். பொருளினால் உளவாம் சிற்றின்பங்களில் அழுந்தாமல் பேரின்பம் பேணி நின்றார். அறவாழி அந்தணனாகிய இறைவன் தாளையே என்றும் எண்ணியிருந்து புண்ணியம் புரிந்தார். அதனால் பிறவாழி நீந்தினார்.

அன்பமைந்த நெஞ்சில் அருளமைந் தென்றும்
இன்பமைய நிற்கும் இறை.

சனகன் இறைவன் தாள் சேர்ந்து பிறவாழி நீந்தினான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

வேதன் உயர்தலையும் வெண்டலையாய் வீழ்ந்துபலிக்
கோதடைந்த தென்னே குமரேசா—பூதலத்திற்
கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. (௯)

இ—ள்.

குமரேசா! வேதனது உயர்ந்ததலையும் வெள்ளிய தலையாய் மாறி யேன் குற்றமுற்றதெனின், எண் குணத்தானது தாளை வணங்காத தலைகள் கோள் இல் பொறியிற் குணம் இல என்க.

உம்மை சிறப்பும்மை. கோள் இல்பொறி = புலன்களைக் கொள்ளுதல் இல்லாதபொறிகள். இனி அறிவு இல்லாதபாவைகள் எனவு

மாம். எண் என்றது எட்டு என்னும் தொகைப்பெயரைச் சுட்டி நின்றது. இது வினை முதலானல் எண்ணுகின்ற குணத்தான் எனப்படும்.

தலைமை, தூய்மை, தத்துவ வுணர்வு, அருள், வலி, இன்பம், அமலம், தெளிவு, என்னும் எண்வகைக் குணங்களையும் தனக்கு இயல்பாகவே உடையான் என்பார் எண்குணத்தான் என்றார்.

பரிசம் தெரியாத மெய்யும், சுவையை உணராத வாயும், ஒளியைக்காணாத கண்ணும், நாற்றத்தை அறியாத மூக்கும், ஓசையைக் கேளாத செவியும், உருவுடன் இருப்பினும் அவை எவ்வாறு பயன்படாவோ, அவ்வாறே, இறைவனது தாளை வணங்காத தலை உருவுடன் இருப்பினும் பயன் இலை யென்பார் "கோள் இல் பொறியிற்குணம் இல" என்றார்.

தலைமை முதலிய எண் வகைப்பட்ட குணங்களை யுடையானது தாளை வணங்காத தலைகள் புலன்களைக் கொள்ளாத பொறிகள் போல் பயன்படா என்பதாம்.

இறைவன் எண்வகைக் குணங்களை யுடையவன் என்பதும், அவனது தாளை வணங்குதலே ஒருவன் பிறவிக்குப் பயனும் என்பதும், வணங்காத தலை யிழிவுறுமென்பதும, இதில் உணர்த்தப் பட்டன. இவ்வுண்மை பிரமன்பால் உணரப்படும்.

கதை.

ஒரு காலத்தில் பிரமன் தானே தலைமைக்கடவுள் என்று எண்ணிச் சிவபெருமானை வணங்காமல் செருக்குற்று இருந்தான். அதனையறிந்த பரமபதி அப்பிரமனது தலைகளுள் ஒன்றைக் கிள்ளி யெறிந்தார். கிள்ளப்பட்ட அத்தலை பெருமையிழந்து பிச்சைப் பாத்திர மாயிற்று. இதன் விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

பெருவிதியும் சிறுவிதியும் பெருமானை வணங்காமல்
பிணங்கி யந்தோ
இருதலையும் இழந்திழிந்தார் என்பதனை மன்பதைகள்
இனிது தேர்ந்தும்
அருமறைகள் புகழ்ந்துமகிழ் அவன்தாளை வணங்காமல்
ஆசை நோயால்
கருமமிகப் புரிந்துபிறந் திறந்துபவக் கடல்விழுந்து
கவல்வ தென்னே.

என்றதுங் காண்க. பெருவிதி = பிரமன். சிறுவிதி = தக்கன். தக்கன் சிவபிரான் தாளை வணங்காமையால் தனது சிறந்த தலையை யிழந்தான். இழிந்த ஆட்டுத்தலையை யடைந்தான். இறைவனடியினை அன்பால் நினைந்து வணங்காதவன் எவ்வளவு உயர்ந்த பிறவியை யடைந்திருந்தாலும் அவன் இழிந்தழிவான் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

உடையானை நாடி யுளங்கனியா னாகில்
கடையா மவன்பிறப்புக் காண்.

இதனால் ஒருவன் தலைக்குப் பயன் சாற்றப்பட்டது.

சேர்ந்ததிண்ணர் வெம்பிறவி தீர்ந்தார்பின் சேராதார்
கூர்ந்தாழ்ந்தார் என்னே குமரேசா—ஆர்ந்த
பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார். (ய)

**குமரேசா!** இறைவன் அடியைச் சேர்ந்த திண்ணனார் பிறவியைத்தீர்த்தார்; அதனைச் சேராதார் என் அதில் அழுந்தினார் எனின், இறைவன் அடி சேர்ந்தார் பிறவிப் பெருங்கடல் நீந்துவர் சேராதார் நீந்தார் என்க.

இஃது இறைவனடி சேர்வார் பிறவி தீர்வர் என்கின்றது. திண்ணர் = கண்ணப்பர். சேர்ந்த என்றது உலகியலை மறந்து இறைவனடியையே உறுதியாகப் பற்றி உருகி நின்றமை கருதி. ஐயோவோ என அரற்றியழுங்குமாறு வெய்ய துன்பங்கட் கெல்லாம் பிறவி இடமாகுமாதலால் வெம்மை அதற்கு அடையாகி நின்றது. காய்ந்த இரும்பு கொண்ட நீர் போற் கலந்திறையைத் தோய்ந் தென்றுந் தோன்றாத்துறை சேர்ந்தார் ஆதலால் பிறவி தீர்ந்தார் என்றாம். சேராதார் என்றது கண்ணப்பருடைய வேட்டைத் தோழர்களை. ஆர்ந்த என்றது துன்பங்கள் நிறைந்த என்றவாறு.

சேராதார் நீந்தார் என்றதனால் சேர்ந்தார் நீந்துவர் என்பது பெறப்படுமாயினும் உறுதி தோன்ற உடன் கூறினார். நீந்துவர் என்னும் பயனிலைக்கு எழுவாயாகச் சேர்ந்தார் என்பது இதில்

வருவிக்கப் பட்டது. பொருள்கோடற்கு இசைவில்லாமல் சொல் எஞ்சி நிற்குமாயின் இசைவு நோக்கி அதனை இசைத்துக் கொள்ளலாம் என்க. இங்ஙனம் கொள்வதைச் சொல் எச்சம் என்பர்.

இறைவன் அடிசேர்ந்தார் கடல் சேர்ந்து நில்லார் என்க. மேல், இறைவன் தாளைவணங்கலே ஒருவன் தலைக்குப் பயனும் என்றார்; இதில் அதனையடைந்தவர் பின்பு பிறவியை அடையார் என்கின்றார்.

இறைவன் அடியைச் சேர்ந்தவர் பிறவியாகிய பெரியகடலைக் கடந்து விடுவர்; அதனைச் சேராதவர் கடக்கமாட்டாராய் அதனுள் ஆழ்ந்து அழுந்துவர் என்பதாம்.

பிறவியைப் பெருங்கடல் என்றது முடிவின்மையும்கடத்தற்கு அருமையும் கருதி என்க.

இவ்வுலகுக்கு ஒரு முதல்வனுளன்; அவன் தூய அறிவினையுடையவன்; அவனடியைத்தொழுதலே அறிவுடைமைக்குப் பயன்; அங்ஙனம் தொழுவார் பெரு வாழ்வுடையராய் எல்லா நலங்களையு மெய்தி இன்புற்றிருப்பரென இதுவரை உரைத்து வந்துஇறுதியாக அவனடியை அடைந்தவர் பின்பு பிறவியை அடையார் என உறுதி பெற அறுதியிட்டு இதில் உணர்த்தியருளினர் என்க.

பிறவிக்கடலைக் கடத்தற்கு இறைவன்தாளே புணையாய் நின்று துணை செய்யும் என்பது குறிப்பு.

பிணி மூப்பு சாக்காடு முதலிய பெருந்துன்பங்கட்கெல்லாம் நிலைக்களனுயுள்ள பிறவியை ஒருவன் கடக்கவேண்டுமாயின் அவன் இறைவனை நினைக்கவேண்டும் என்பது கருத்து.

இறைவனடியை நினைந்து உருகி நின்றவரே பிறவி நீங்குவர்; அல்லாதார் அதனில் அழுந்தி வருந்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்ணப்பர் கண்ணும், அவர் தோழர் பாலும் உணரப்படும்.

கதை.

கண்ணப்பர் என்பவர் பொத்தப்பி நாட்டிலுள்ள உடுப்பூரிலே வேடர்களுக்குத் தலைவனுகிய நாகன் என்பவனுக்கும் தத்தை என்பவளுக்கும் புத்திரராய்த் தோன்றினர். பிறந்தபொழுதே இவர்

தேகம் திண்மையா யிருந்தபடியால் பெற்றோர் இவருக்குத் திண்ணனார் என்று பெயரிட்டனர். பருவம் வந்தபின் இவர் தமது மரபுக்குரிய வேட்டைத்தொழிலை மேற்கொண்டு வேடர் சிலருடன் காட்டில் புகுந்தார். பல மிருகங்களையும் வேட்டையாடிச் சென்றார். சென்றவர், தெய்வாதீனமாகத் திருக்காளத்தி மலையைக் கண்டார், அதின் மேல் ஏறினார். அங்குவிளங்கியிருந்த சிவலிங்கத்தை அணுகினார். உடனே அன்பால் உருகினார். உண்ணும் உணவும், பருகும் நீரும் துறந்தார். ஆறுதினங்களாக இரவும் பகலும் அம் மூர்த்தியையே கண்ணும் கருத்துமாகக் காத்தார். பலவகையிலும் அன்புசெலுத்தினார். என்பும் உருகும் இயல்பில் உரிமை பூண்டிருந்தார். இங்ஙனம் இருப்ப ஆறுவது நாளில் அச் சிவலிங்கத்தின் வலக்கண்ணில் உதிரம் வரும்படியான ஒருசோதனை நிகழ்ந்தது. அதனைக் கண்டவுடனே யிவர் உளம் பதைத்தார். உடல் துடித்தார். ஐயகோ! என் ஐயன் கண்ணில் இரத்தம்தோன்றிற்றே! யென்று அலறினார். அழுது ஓடிப் பல பசிய இலைகளைக் கொண்டு வந்தார். தமது வலிய கரத்தில் வைத்து நவியப் பிசைந்தார். அச்சாரத்தை அக்கண்ணில் பிழிந்தார். குணமின்மை கண்டார். வருந்தினார். தமது வலக்கண்ணையே தோண்டி யதில் அப்பினார். உடனே யிடக்கண்ணிலும் உதிரம் பெருகினது. அதுகண்ட திண்ணனார் தமது இடக்கண்ணையும் அப்புதற்கு ஒப்பிக் கையிலிருந்த கூரிய அம்பால் அதனைக் கிளறித் தோண்டினார். உடனே எம்பெருமான் தோன்றி "நில்லுகண்ணப்ப, நில்லுகண்ணப்ப, என் அன்புடைத் தோன்றல், நில்லு கண்ணப்ப" என்று கூவித் தமது செங்கையல் அவரது திண்கையைப் பிடித்துத் தடுத்து ஆட்கொண்டார். கண்ணை அப்பினதினாலே கண்ணப்பன் என்னும் பெயரைப்பெற்றார். பிறவிப்பெருங்கடல் நீந்திப் பேரின்பம் உற்றார். உடன் சென்ற வேட்டைத் தோழர்களாகிய நாணன் காடன் என்பவர் நகரைநோக்கி மீண்டார். பின்புபிறவியை யடைந்தார். இதன் விரிவு பெரியபுராணத்தில் இனிது புலனாம்.

ஈசனையுள் ளேத்திநின்றார் இன்புறுவர் இல்லாதார
நீசராய்த் துன்புறுவர் நின்று.

இறைவனது அடிகளை அடைந்தார் பிறவியை அடையார் என்பது இதனால் கூறப்பட்டது.

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

கடவுள் ஒருவர் உளர். அவர் அகரம்போல் உலகு உயிரெங்கும் ஒழிவற நிறைந்த ஒண்பொருள். அப்பொருளின் அடிகளைத் தொழுதலே அறிவுடைமைக்குப் பயன். அங்ஙனம் தொழுபவர் அழிவில் வாழ்வையடைவர். அவரைத் துன்பங்கள் தொடரா. வினைகள் சேரா. அவர் இன்பவாழ்வை எய்துவர். அவரைக் கவலைகள் கதுவா. பற்றுக்கள் பற்றா. தலைவனது தாளை வணங்குதலே தலைக்குப் பெருமை. தாளை யடைந்தார் பிறவியை யடையார் என்பனவாம்.

பின்வரும் திருநாமங்கள் கடவுளைக் குறித்து முறையே இவ்வதிகாரத்தில் வந்துள்ளன.

1. ஆதிபகவன்.
2. வாலறிவன்.
3. மலர்மிசையேகினான்.
4. வேண்டுதல் வேண்டாமையிலான்.
5. இறைவன்.
6. பொறிவாயில் ஐந்தவித்தான்.
7. தனக்குவமையில்லாதான்.
8. அறவாழியந்தணன்.
9. எண் குணத்தான்.
10. இறைவன்.

முதலாவது கடவுள் வாழ்த்து முற்றிற்று.

# 2-ம் அதிகாரம் வான் சிறப்பு.

அஃதாவது மழையினது பெருமை. இம்மழை கடவுளது அருள்வடிவாய் நின்று பருவங்கண்டுபெய்து இவ்வுலகை நிலைபெறச்செய்து வருகின்றதாதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

"வானம் பரவுதூஉம் வானம் பரவுதூஉம்
ஞான முதல்வன் அருள்போல ஞாலக்குப்
பானமு மாகி வளமும் பலவளித்துத்
தானே துணையாத லான்"

என்றபடி இது நின்றுவருதலை நாளும் நன்குணரலாம். தோன்றாத் துணையாய் நிற்கும் ஆதிபகவன் மழையைத் தோன்றுந் துணையாய் நிறுத்தித் தன் உலகத்தைக் காத்துவருகின்றான் என்க.

11. ஏனோ அமிழ்தீயான் இந்திரன்முன் வானையீந்தக்
கோனுலகுக் கீந்தான் குமரேசா—ஆனாமல்
வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று. (க)

இ—ள்.

குமரேசா! முன்னர் இந்திரன் அமிழ்தத்தைக் கொடுக்காமல் ஏன் இவ்வுலகுக்கு மழையைக் கொடுத்தான்? எனின், வான் நின்று உலகம் வழங்கி வருதலால் தான் அமிழ்தம் என்று உணரற் பாற்று என்க.

இது, மழையின் மாட்சி கூறுகின்றது.

கோனுலகு என்றது சிறந்த உலகம் என்றவாறு. சிறப்புஎன்னை எனின்? போகந்துய்த்துப் புண்ணியங்கழிய நிற்கும் பொன்னாடு போலாது எண்ணிய அறங்களைச்செய்து என்றும் நிலைதிரியாத வீட்டின்பத்தைப் பெறுதற்கிடனாய் நிற்கும் பெருமை என்க. சுட்டு அண்மைதோன்ற நின்றது. ஆனாமல் = நீங்காமல்; இது வானின் நிலைத்த நிலையினை விளக்கி நின்றது.

உணரற்பாற்று = உணரும் பான்மையுடையது; அமிழ்தமென்று உணர்ந்து மதிக்கத்தக்க தகுதியை மழை உடையது என்றவாறு.

வான் என்றது மழையினை. இஃது ஆகுபெயர். நின்று என்னும் வினையெச்சம் வழங்கி வருதல் என்னும் உலக வினையோடு உற்று முடியாதாதலால் அதற்கியைய அதனை நிற்ப அல்லது நிற்றலால் எனத் திருத்திக்கொள்க. வினை எச்சங்கள் வேறு வாய்பாடுகளாக மாறிவந்தாலும் அவற்றின் பொருள்கள் வேறுபடா என்க.

இனி, நின்று என்பதை உலகோடு இணைத்து வானால் உலகம் நின்று வழங்கிவருதலால் எனினும் அமையும். இதில் வான்மேல் ஆலுருபை வருவிக்கவேண்டும். நின்று என்பதை ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபாக்கொண்டு ஏதுவாக்கி உரைப்பினுமாம்.

மழையினால் இவ்வுலகம் நிலைபெற்று வருதலால் அஃது இவ்வுலகத்துக்கு அமிழ்தம் என்று உணரும் பான்மையுடையது என்பதாம்.

தான் என்றது அம்மழையை. அமுதம்போல் மழையும் உயிர்களை நிலைத்து வாழச்செய்து வருகின்றது ஆதலால் அதன் பெருமையை நினைந்து போற்றுக என்பது குறிப்பு. தொட்ட இடமெல்லாம் தோன்றும் நீர் தானே என்று மழையை இகழற்க; தோன்றாத் துணையாய் நின்று உயிர்களைக் காத்துவரும் அமிழ்தம் என்று அதனைப் புகழ்க என்றபடி.

பொது நோக்கில் நீர் என மழை எளிதாகத் தோன்றினும் சிறப்பாக ஊன்றி நோக்கின் அரிய அமிழ்தின் தன்மையை அஃதுடைத்தாயுள்ளதாதலால் அவ்வுண்மையை உணர்வுடை மக்கள் உணர்ந்துகொள்ளவேண்டும் என்பதாம்.

தனக்கு உதவிசெய்து வருவாரது பெருமையை ஒருவன் உணர்ந்து போற்றானாயின் அவன் செய்ந்நன்றி கொன்ற மகனாய்ச் சிறுமையுறுதல்போல், நமக்கு இதஞ்செய்து நிற்கும் மழையின் மாட்சியை மக்கள் மதியாராயின் மதியிலராய் மதிப்பிழப்பர் ஆதலால் இதன் அருமையை உணர்ந்தொழுகவேண்டுமென இங்ஙனம் உணர்த்தியருளினர்.

மழையினாலேதான் உலகம் நிலைபெற்றுவருகின்றது என்பதும் அஃது உயிர்களுக்கு அமிழ்தம்போல்வதென்பதும். அமிழ்தத்தை யுடைய இந்திரனும் முன்னொரு காலத்தில் தான் நன்மைசெய்ய விரும்பிய உயிர்கட்கு இம்மழையையே உதவினான் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன.

## கதை.

முன்பு ஒரு காலத்தில் இவ்வுலகில் மழைபெய்யாது பொய்த் தது. அதனால் உயிர்களெல்லாம் வருந்தி நொந்தன. அக்காலத் தில் ஆபுத்திரன் என்பவன் ஒருவன் இருந்தான். இவன் வாரணாசி என்னும் ஊரிலே அபஞ்சிகன் என்னும் அந்தணன் மனைவியாகிய சாலி என்பவளுடைய மகன். ஒரு காரணத்தால் அத்தாய் இவனை ஒரு காட்டில் விட்டுப்பிரிந்தாள். இவன், பசி நோயால் வாடி யழுதான். அப்பொழுது தெய்வப் பசு ஒன்று இவனை அணுகிப் பாலூட்டி வளர்த்தது. ஆ ஆதரித்த காரணத்தால் இவன் ஆபுத் திரன் எனப்பட்டான். பெரியவனானபின் தென் மதுரையைச் சேர்ந்தான். அங்குப் பசியால் வருந்திய உயிர்களைக் கண்டான். உள்ளம் இரங்கினான். தான் பெற்றிருந்த அக்ஷய பாத்திரத்தின் மகிமையால் அவ்வெல்லா வுயிர்கட்கும் நல்லுணவூட்டினான். உயிர் களெல்லாம் உண்டு மகிழ்ந்தன. பற்றிநின்ற பசிநோய் முற்றும் அகன்றது. இந்த உண்மையை இந்திரன் அறிந்தான். ஆபுத்திரன் பால் அன்புடன் வந்தான். பேரருளாளா! என்று பேணியழைத் தான். நின் புண்ணியத்திற்கு மகிழ்ந்தேன்; என்னுலகம் வா என்றான். அவனை நோக்கி இவன் புன்னகை செய்தான். பசி நோயகற்றி உயிர்களை மகிழ்விக்கும் இப்பெரும் பேற்றை இழந்து நின்னுடன் வருதற்கு யான் இசையேன் என்று மறுத்தான்.

"ஈண்டுச் செய்வினை யாண்டு நுகர்ந்திருத்தல்
காண்டகு சிறப்பினும் கடவுளர் அல்லது
அறஞ்செய் மாக்கள், புறங்காத்து ஓம்புநர்,
நற்றவஞ் செய்வோர், பற்றற முயல்வோர்,
யாவரும் இல்லாத் தேவர் நன் னாட்டுக்கு
இறைவனாகிய பெருவிறல் வேந்தே!

வருந்தி வந்தோர் அரும்பசி களைந்தவர்
திருந்து முகங் காட்டும் என் தெய்வக் கடிஞை,
உண்டி கொல்லோ உடுப்பன கொல்லோ
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவை யீங்களிப்பன தேவர் கோன்!" என இவன் சிரித்துரைத்தான். தானச் செருக்கால் தன்னை இங்ஙனம் மதியாதுரைத்தானேயென்று அவன் முதிர்சினங் கொண்டான். உடனே எல்லா வுயிர்களுக்கும் பசியிலவாம்படி செய்ய அவன் பரிந்து நினைந்தான். தன்பாலுள்ள எதையும்உதவவில்லை. மழையையே உதவினான். அதனால் மாநிலம் செழித்தது. வளமிகப்பெற்றது அன்றுமுதல் எல்லாவுயிர்களும் பசிநோயகன்றன. உலகமும் இனிதா ஒரு நிலை நின்றது. மழையை உருவம் நோக்கி நீர் என நினையாமல் அதன் தன்மையை வியந்து அமிழ்தென உணர்ந்தது. இதன் விரிவை மணிமேகலையில் காண்க.

**மன்னுயிர்கட் கின்னமிர்தாம் மாமழையின் றேலுலகம்**
**என்னுயிர்த்து வாழும் இனிது.**

மழையை அமிழ்தமென்று மதிக்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

**12.** உண்டிதரு நீரும் உணவாகச் சீதைபண்டு
கொண்டிருந்தாள் என்னே குமரேசா—உண்டிதனைத்
துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை. (உ)

இ—ள்.

குமரேசா! நீரையே உணவாகவும் கொண்டு சீதை என் முன்பு உறைந்திருந்தாள்? எனின், துப்பார்க்கு துப்பு ஆய துப்பு ஆக்கி துப்பார்க்கு துப்பு ஆயதூஉம் மழை என்க.

உண்டிதரும் = உணவுகளை உளவாக்கித் தருகின்ற. இது நீருக்கு அடையாகி அதன் நீர்மையை விளக்கி நின்றது.

மழையை அமிழ்தமென்று உணரவேண்டுமென மேல் உணர்த்த, அங்ஙனம் உணர்தற்கு அது நமக்கு என்ன செய்கின்ற தென்பாரை நோக்கி இஃதுணர்த்தியதாகக் கொள்க.

துப்பு என்னும் சொல் உணவு, சுத்தம், வலிமை முதலிய பல பொருள்களையும் உணர்த்திவரும்.

துப்பார் = உண்பார். துப்பு ஆய துப்பு ஆக்கி = சுத்தமான உணவுகளை உளவாக்கி. துப்பு ஆயதூம் = உணவாயதூம் ; என்றது தண்ணீராயும் உண்ணப்படுதலை. இதில் அளபெடை இசை நிறைத்து நின்றது.

துப்பார்க்கு என்ற இரண்டனுள் முன்னது உணவுப்பொருள்களை அமைத்துச் சுவைபெறச் சமைத்துண்போரெல்லாரையும் பொதுவாக உணர்த்தி நின்றது. பின்னது அவற்றை உண்கின்றாரைச் சிறப்பாகக் குறித்ததென்க.

துப்பு ஆய துப்பு ஆக்காமலே உதிர் சருகு கந்த மூலங்களை உண்டு நிற்கும் யோகிகளுக்கும், விலங்கினங்கள் முதலியவற்றிற்கும் நீர் துப்பாய் நிற்பதூஉம் காண்க.

மேல், மழையினாலேதான் உலகம் நிலைபெறுகின்றதென்றார், இதில், நிலையாய் நின்று உயிர்களுக்குப் பலவகையினும் அது பயன்படுகின்றதென்கின்றார்.

உண்பார்க்கு நல்ல உணவுகளை உளவாக்கி உதவி, அவற்றை உண்ணுங்கால் தானும் அவர்க்கு உணவாய் நிற்பதும் மழையே என்பதாம்.

மழை பலவகையானும் நின்று உயிர்களது பசியையும் தாகத்தையும் நீக்கி வருகின்றதென்பதும், ஒரு காலத்தில் சீதை தனி நீரையே தனது உணவாகக் கொண்டிருந்தாள் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன.

**கதை.**

சீதை இலங்கையில் சிறைவாசஞ் செய்தபொழுது வேறு சிறந்த உணவுகளை உண்ணாமல் நீரையே பருகி உயிர் வாழ்ந்திருந்

தாள். இந்த வுண்மை, தூதுவந்த அனுமான்பால் அந்த அம்மை அருளியுள்ள திருமொழிகளால் இனிது புலனும். அவை "அனுமானே! இந்த இடத்தைவிட்டு யான் வேறெங்குஞ் செல்வதில்லை; தளர்கின்ற எனது அரிய உயிரைக் காக்கும்பொருட்டுச் சிறிது நீர் பருகுதற்காகச் சிற்சில சமயங்களில் இரகுவீரனது திருமேனியை யொத்திருக்கின்ற இதோ தோன்றுகின்ற நீர்நிலைக்கு மட்டும் செல்வேன்" என்பனவாம்.

> நீர்விலேன் இது ஒருபகலும்; சிலை
> வீரன்மேனியை மானும்இவ் வீங்குநீர்
> நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன்
> சோரும் ஆருயிர் காக்குந் துணிவினால். (இராமாயணம்.)

நண்ணுவேன் என்றதனால் சிலைவீரனது மேனியையொத்த நீர் நிலையின் காட்சியால் சோர்வு நீங்கி உயிர் நிலைத்தனர் என்பதுமாம். ஆருயிரை நீரால் பேணி இத்திருமகள் அமர்ந்திருந்த உண்மையை யிங்ஙனுணர்த்தி நிற்றல் காண்க. உயிர்களுக்கு நல்ல உணவுகளை உளவாக்கித் தருதலோடு தானும் இங்ஙனம் உண்ணப்பட்டு நீர் உதவி வருதலால் உலகிற்கு அமிழ்தமென அது நிலவியுள்ளது "துப்பார்க்குத் துப்பாயதூஉம் மழை" என்பதை உலகங்காண இவர் உணர்த்தி நின்றார்.

> எங்கும் இறையருள்போல் எல்லாமாய் நின்றுமழை
> தங்குமுயிர் இன்பமுறத் தான்.

மழையினது அரிய உதவிகள் இதனால் கூறப்பட்டன.

---

13\. தேசுமிகு கோசிகனும் செத்தநாயூனையுண்ணக்
கூசாத தென்னே குமரேசா—மாசகன்ற
விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி. (௩)

இ—ள்.

குமரேசா! கோசிக முனிவரும் நாயின் ஊனை என் கூசாமல் தின்னத் துணிந்தார்? எனின், விண் நின்று பொய்ப்பின் விரிநீர் வியன் உலகத்துள் பசி நின்று உடற்றும் என்க.

உயர்ந்த தேவர்களும் உவந்து போற்றுமாறு தவ ஒளியால் சிறந்து நின்றாராதலால் தேசுமிகு கோசிகன் என்றாம். உம்மை சிறப்புணர நின்றது. கூசாதது என்னை? என்றது இழிந்த விலங்கும் உண்ண எண்ணாத அவ்வூனை ஞானசீலனாகிய இவ்வுயர்ந்தவன் உண்ணத் துணிந்தமையை வியந்தென்க.

விண் என்றது மழையினை. ஆகாயத்தின் பெயர் அங்குள்ள மழையை உணர்த்தி நின்றமையான் இது, ஆகு பெயரென்க.

விண் நின்று பொய்ப்பின் = வானம் நிலையாகப் பெய்யாதாயின்; நின்று என்பது பொய்ப்பிற்கு அடையாய் நின்று அதன் நெடிய நிலைமையை நிலைபெற விளக்கிற்று.

பருவங்கண்டு மழை பெய்யாமல் பெய்தகு என்ற பேருக்கு இடையிடையே சிறிது பெய்யுமாயின் அது நில்லாது பொய்த்ததாம்; யாதும் பெய்யாது ஆண்டுக்கணக்காக அறவே யொழியுமாயின் அது நின்று பொய்த்ததாம் என்க. இனி, இன்று என்று பிரித்து மழை இல்லையாய்ப் பொய்க்குமாயின் எனவுங் கொள்ளலாம்.

விரிநீர் = கடல். விரிந்த நீர் என்னும் ஏது வான் வந்தது. மழைநீர் இல்வழி விரிநீரால் பயனில்லை யென்பது குறிப்பு.

மேல், உண்ண உணவும் பருகநீரும் மழை உதவும் என்றார்; இதில், அஃதில்லையாயின் உயிர்களெல்லாம் பசிநோயால் வருந்தும் என்கின்றார்.

மழை நிலையாகப் பெய்யாதாயின் விரிந்த நீரினையுடைய அகன்ற உலகத்தின்கண் பசி நிலைத்து உயிர்களை வருத்தும் என்பதாம்.

மழை நிலைத்து மறுத்தால் பசி நிலைத்து வருத்தும் என்பார்; "விண்ணின்று பொய்ப்பின் பசி நின்று உடற்றும்" என்றார்.

இவ்வுலகில் மழையில்லையாயின் சிறந்த முனிவர்களாயினும் பசிநோயால் வருந்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோசிகர்பால் உணரப்படும்.

## கதை.

கோசிகர் என்பவர் காதி என்னும் மன்னனுடைய அருமைத் திருமகனார். கௌசிகர் மரபில் பிறந்தவராதலால் இவர் கோசிகர் எனப் பெற்றார். தவம் புரிந்து முனிவராயபின் இவருக்கு விசுவாமித்திரர் என்று பெயர். இவர் நிறைந்த அறிவும் சிறந்த வீரமும் உடையவர். மிக்க கீர்த்தியோடு அரசு புரிந்து வந்தார். ஒருநாள் வேட்டைக்குச் சென்றார். தவத்தின் பெருமையை வசிட்டரிடத்தில் நன்கு தெளிந்தார், அதனால் அரசைத் துறந்தார். அருந்தவஞ்செய்ய வனத்தில் புகுந்தார். கண்மூடி மௌனியாகி நீண்ட காலம் யோகத்திலிருந்த இவர் ஒருசமயம் விழித்தார். மழை இல்லாதபடியால் உலகம் நிலைகுலைந்திருந்தது. பலவுயிர்களும் மடிந்து கிடந்தன, அக்கொடுங் காட்சிகளைக் கண்டார். தாமும் பெரும்பசியால் வருந்தினார். உணவுப்பொருள்களை நாடித் தேடினார். ஒன்றுந் தோன்றவில்லை. முனிவர் பலவுந்தேடி முடிவில் இறந்து கிடந்த ஒரு நாயின் பிணத்தைக் கண்டார். பசிக்கொடுமையால் அந்த ஈன ஊனையுந் தின்னத் துணிந்தார். உடனே இந்திரன் வந்து தடுத்து மழைவளம் பெருகச் செய்தான். அதன் பின் உலகம் செழித்தது. உயிர்கள் பசிநோய்நீங்கி உளமிக மகிழ்ந்தன. மழை பொய்த்து நின்றபொழுது வருத்திநின்ற பசி அது பெய்தபின் ஒழிந்து போயதை நினைந்து அமரரும் உவந்து நின்றனர். "விண்ணின்று பொய்ப்பின், விரிநீர் வியனுலகத்துள் பசி நின்று உடற்றும்" என்னும் உண்மையை உலகம் அன்று உணர்ந்து தெளிந்தது. இதனால், உற்றநோய் ஆற்றும் தவத்தினரும் பசிநோய் ஆற்றாது பதைப்பர் என்பதும், தன்னையுடையானை மானமுதலியவற்றை இழப்பித்து இழிவுறும்படி அது தூண்டிவிடும் என்பதும், இககேடுகளெல்லாம் மழை இன்மையானே நிகழும் என்பதும், தெளியப்படும்.

"புன்மரம் புகைப் புகையழற் பொங்கி

மன்னுயிர் மடிய மழைவளங் கரத்தலின்
அரசுதலை நீங்கிய அருமறை யந்தணன்
இருநில மருங்கின் யாங்கணுந் திரிவோன்
அரும்பசி களைய ஆற்றுவது காணான்
திருத்த நாயூன் தின்னுத லுறுவோன்,
இந்திர சிறப்புச் செய்வோன் முன்னர்
வந்து தோன்றிய வானவர் பெருந்தகை
மழைவளந் தருதலின் மன்னுயி ரோங்கிப்
பிழையா விளையுளும் பெருகிய தன்றே." (மணிமேகலை.)

இது; தீவதிலகை என்னும் தெய்வமகள் சொல்லியது, மேற்குறித்த சரித உண்மை இதன் கண் விளங்கி நிற்றல் காண்க.

"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாண்அணி களையும் மாண்எழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவி." (மணிமேகலை)

மானங் குலங்கல்வி வண்மை யறிவொழுக்கம்
தானம் தவமுயற்சி தாளாண்மை—தேனிற்
கசிவந்த சொல்லியர்பால் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம். (நீதிவெண்பா)

இவை அப் பசிக்கொடுமையை விளக்கி நிற்றலுணர்க.

வெய்ய பசிநோயால் வெம்பியுயிர் வீயுமே
செய்யமழை பெய்யா தேனின்.

மழை மறுத்தால் பசிவருத்தும் என்பது இதனாற் கூறப்பட்டது.

---

14. ஏர் நிலங்கள் வைத்திருந்தும் ஏனுழவு செய்யவில்லை
கூறருள்சேர் நல்லான் குமரேசா—சீர்நிறைந்த
ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால். (௪)

இ—ள்.

குமரேசா! நல்லான் என்பவர் ஏர்களையும் நிலங்களையும், வைத்திருந்தும் ஏன் உழுதலைச் செய்யவில்லை? எனின், புயல் என்

னும் வாரி வழங்குன்றினால் உழவர்கள் ஏரின் உழார்என்க.
இது மழையில்லையானால் உழவில்லை யென்கின்றது.

புயல் = மழை. வாரி = வருவாய். எல்லா வருவாய்களுக்கும் மழையே காரணமாகுமாதலால் அதன் தலைமை தோன்றப் புயல் என்னும் வாரி என்றார்.

மழையென்னும் வருவாய் தன் வளங்குன்றினால் இவ்வுலகில் உழவர்கள் ஏரால் உழுதலைச் செய்யார் என்பதாம்.

பசி நோய்க்கு மருந்தாகிய உணவுப்பொருள்களை உளவாக்கு தற்கு நீர் நிலம் ஏர் எரு முதலிய உபகரணங்கள் பல வேண்டும் ஆயினும் அவற்றுள் முக்கியமானது நீர் ஆதலால் அஃதில்லையானால் அவை பயன்படா என்பார், "புயல் என்னும் வாரி வளங்குன்றிக் கால் ஏரின் உழார்" என்றார். குன்றிய என்பது குறைந்து நின்றது. வளங்குன்றுதலாவது நலம் பெறப் பெய்ய வேண்டியபொழுது பெய்யா தொழிதல்.

மழையின்மை உழவின்மைக்கும், உழவின்மை உணவின்மைக் கும், உணவின்மை உயிரின்மைக்கும், உயிரின்மை உலகின்மைக் கும், ஏதுவாம் என்க. எனவே மழையால் உழவும், உழவால் உண வும், உணவால் உயிரும், உயிரால் உலகும் உளவாம் என்பதாம்.

முதல் இரண்டு பாவில் மழையானது அமிழ்தம்போல் நின்று உயிர்களது பசியையும், நீர் வேட்கையையும் நீக்கும் என்றும், மூன் றாவதில் அம்மழை யில்லையானால் பசி உண்டாம் என்றும் கூறி இதில், அப்பசியுண்மைக்குரிய வகை கூறினார்.

மழையில்லையானால் உழவர் தங்கள் நிலங்களைஉழார்என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நல்லான்பால் உணரப்படும்.

### கதை.

நல்லான் என்பவர் இற்றைக்கு ஆயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்தவர். வேளாள குலத்திற் பிறந்தவர். விரிந்த நிலங்களும் நிறைந்த செல்வமும் உடையவர். மிக்க வள்ளற் குணம் வாய்ந்தவர். இறைவன்பால் என்றும் பெருகிய அன்பினர்.

"பொடியார்க்கு மேனிப் புனிதர்க்குப் புனிதவேற்றுக்
கொடியார்க்கு வேதக்குடுமிக் கிணையான கூடற்

படியார்க்குஞ் சீர்த்திப்பதி ஏருழவோருள் நல்லான்;
அடியார்க்கு நல்லான்; அறத்திற்கும் புகழ்க்கும் நல்லான். (1)

அனையான் அறத்திற்கருள் போன்றவள்; ஆன்றகற்பின்
மனையாள்; மரபின் வழுவாத தருமசீலை;
எனையாரு நன்குமதிக்க இருக்கு நீராள்;
தனையாள் பதிக்குக் கதிக்குத் தனிச்சார்பு போல்வாள். (2)

பல்லே ருழவின் தொழில் பூண்டு பயன்கள் கொள்வான்;
வில்லே ருழவர் கடன் கொண்டு மிகுந்தவெல்லாம்
இல்லே ருழத்தி மடைச்செல்வம் இயற்றியேர்ந்த
அல்லேறு கண்டன் அடியாரை அருத்தும் நீரான்" (3)

என்றபடி யாவரும் புகழ்ந்து போற்ற ஏர் வளத்தோடு சீர்பல எய்தி இவர் விளங்கி யிருந்தார். தமது செல்வத்தைப் பலர்க்கும் பகுத்து உதவி செய்து வந்தார். சிறப்பாகச் சிவனடியார்க்குச் செய்தார். இங்ஙனம் வாழ்ந்துவரும் நாளில் ஒருகாலத்தில் மழை வளங் குன்றினது. அதனால் இவர் நிலவளங் குறைந்தது. பலஏர்கள் வைத்திருந்தும் உழுதலைச் செய்யமுடியவில்லை. வறுமை கூர்ந்தார். வருந்தினார். அதன்பின் சோமசுந்தரப் பெருமானிடம் போய் முறையிட்டார். அப்பெருமான் அருளால் இவர் உலவாக் கோட்டை பெற்றார், உவந்தார். புயல் என்னும் வாரி வளங்குன்றினால் உழவர் ஏரின் உழார் என்னும் உண்மையை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். (விரிவைத் திருவிளையாடலில் காண்க.)

வான்மாறி நின்றக்கால் மண்ணுலகில் யாவுமே
கான்மாறி வீழுங் கலுழ்ந்து.

வாரி வளங்குன்றினால் ஏர் வளங் குன்றும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

15. உற்றமழை பெய்ய உரோமபதன் கேடகன்று
கொற்றமுற்றான் என்னே குமரேசா—வற்றிக்
கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉம் எல்லா மழை. (ரு)

இ—ள்.

**குமரேசா!** மழையின்மையால் கேடுற்றிருந்த உரோமபதன் என்னும் அரசன் அது பெய்தவுடன் கேடுநீங்கி ஏன் மேன்

மையுற்ருன்? எனின், கெடுப்பதும், கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே எடுப்பதும் எல்லாம் மழை என்க.

சார்வு = துணை, மற்று ஆங்கே=மறுபடியும் அப்படியே. என்றது முன்பு பெய்யாது கெடுத்ததுபோல் பின்பு பெய்து எடுக்கும் என்றவாறு.

பெய்யாமல் நின்று கெடுப்பதும்; அங்ஙனம் கெட்டார்க்குத் துணையாய் நின்று பெய்து எடுப்பதுமாகிய எல்லாம் வல்லது மழை என்பதாம்.

முயற்சியால் ஆக்கமும், மடியால் கேடும் ஒருவனுக்கு வரும் எனினும், அம்முயற்சியும், மடியும் மழையினது உண்மை இன்மைகளால் நிலைபெறுதலின் மழையே ஆக்கமும் கேடும் ஆக்கவல்லது என்றார்.

மழைபெய்யாமல் நின்று உலகத்தைத் தாழ்விக்கும் என்பதும், பெய்து அதனை வாழ்விக்கும் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை உரோமபதன்பால் உணரப்படும்.

## கதை.

உரோமபதன் என்பவன் உத்தானபாதன் என்னும் அரசன் புதல்வன். தசரதன் காலத்தவன். வீரமும் அறிவும் மிகவும் வாய்ந்தவன். ஒரு குடைநிழலில் இருநிலம் புரந்தவன். ஒருகாலத்தில் தன் நாட்டில் மழைபெய்யாமல் நின்றது. அதனால் இவன் பெருங்கேடடைந்தான். மழைவழங் கருதிப் பலவகைத் தானங்கள் செய்தான். அவற்றாலும் பயனொன்றுங் கண்டிலன். மிகச் சூழ்ந்துநின்று முடிவில் கலைக்கோட்டு முனிவரைத் தனது நாட்டுக்குக் கொண்டுவந்தான். அம்மாதவன் வருகையால் மழைவளஞ்சுரந்தது. மாநிலஞ் செழித்தது. கேடு நீங்கிற்று, நாடும் நகரமும் நலமுறவாழ்ந்தன. மன்னுயிர்காக்கும் இம்மன்னனும் மகிழ்ந்தனன். கெடுக்கவும், அவ்வாறே எடுக்கவும் மழைவல்லதென்பதை உலகங்காண இவன் உணர்த்தி நின்றான். விரிவை இராமாயணத்தில் காண்க.

புத்தானகொடுவினையோ டருந்துயரம் போயொழிப்பப் புவனந்தாங்கும்
சத்தானகுணமுடையான் தயையினொடு தண்ணளியின் சாலைபோல்வான்
எத்தானும்வெலற்கரியான் மனுகுலத்தே வந்துதித்தோன் இலங்குமௌலி
உத்தானபாதன்அருள் உரோமபதன் என்றுளன் இவ்வுலகை யாள்வான்.

அன்னவன்முன் புரந்தளிக்குந் திருநாட்டில் நெடுங்காலமளவதாக
மின்னியெழுமுகிலின்றி வெந்துயரம் பெருகுதலும் வேதநன்னூல்
மன்னுமுனிவரையழைத்து மாதானம் கொடுக்கினும்வான் வழங்காதாகப்
பின்னுமுனிவரர்க்கேட்பக்கலைக்கோட்டு முனிவரின்வான்பிலிற்றுமென்றார்.

வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடிவெனக் கருகி வான்மிசைச்
சளசள எனமழைத் தாரை கான்றன
குளநெடு நதிகள்தங் குறைகள் தீரவே. (3)

பெரும்புனல் நதிகளும் குளனும் பெட்பறக்
கரும்பொடு செந்நெலும் கவின்கொண் டோங்கிட
இரும்புயல் ககனமீ திடைவிடா தெழுந்
தரும்புனல் சொரிந்தபோ தரசுணர்ந்தனன். (இராமாயணம்) (4)

மேற்குறித்த வுண்மைகள் இவற்றால் இனிதுணரலாகும்.

ஆதி முதல்வன் அழித்தருளல் போன்மழையும்
மோதி யருளு முனைந்து.

மழையினது வன்மையும் நன்மையும் இதனால் கூறப்பட்டன.

---

16. பண்டோர் பசும்புல்லும் பாரா திடைக்காடர்
கொண்டார் வரகேன் குமரேசா—கண்ட
விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது. (சா)

இ—ள்.

குமரேசா! இடைக்காடர் ஒரு பசியபுல்லையும் காணாமல் ஏன் வரகையே உணவாகக் கொண்டார்? எனின், விசும்பில் துளி வீழின் அல்லால் மற்று ஆங்கே பசும்புல் தலைகாண்பு அரிதுஎன்க.

விசும்பு = மேகம். ஆகாயத்தைக் குறித்துவரும் இது, ஆகு பெயராய் இங்கு மேகத்தையுணர்த்தி நின்றது.

மேகத்தினின்று துளி வீழ்ந்தாலன்றி இவ்வுலகத்தில் பசிய புல்லின் தலையையும் காண்டல் அரிது என்பதாம்.

பசுமை புல்லின் இளமை தோன்றநின்றது. முளைகூட வெளிக்கிளம்பா தென்றபடி. தலை = நுனி.

விசும்பு துளியை வீழ்த்தினால் நிலம் பசும்புல்லைக் காட்டும்; இல்லையானால் யாதும் காட்டாதென்றவாறு. புல்லைக் குறித்தது பரிசத்தைமட்டும் அறியும் அதன் கீழெல்லை கருதி.

ஓர்அறிவுயிரும் தோன்றாதெனவே மற்றைய உயிர்களின்தோற்றம் சொல்லவேண்டாவாயிற்று.

"புல்லும் மரனும் ஓரறி வினவே" (தொல்காப்பியம்)

மழையில்லையானால் இவ்வுலகில் ஓரறிவுயிரும் உண்டாகாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இடைக்காடர்பால் உணரப்படும்.

கதை.

இடைக்காடர் என்பவர் கடைச்சங்க காலத்தில் இருந்த ஒரு பெரியவர். சோதிடத்தில் சிறந்தவர். தத்துவநூல்கள் முற்றவுங் கற்றவர். சித்திகள்பல கைவரப்பெற்றவர். நல்ல வுத்தமர். இவர் ஒருகாலத்தில் பன்னிருவருடங்கள் வரையும் இங்கில வுலகத்தில் மழை பெய்யாதென்பதைத் தமது நுண்ணறிவால் முன்னுணர்ந்தார். அதனால் பின்வரும் தமது வாழ்வுக்கு வரகைச் சேகரித்து விரகுடன் வைத்தார். காயசித்தியால் வாழ்ந்தார். மழையின்மையால் உயிர்கள்பலவும் அழிவுறலாயின. உலகமெங்கும் நிலைகுலைந்திருந்தது. அப்பஞ்சகாலத்தில் ஒரு பசும்புல்லையும இவர் காண்பதரிதாயிருந்தது. "விசும்பிற் றுளிவீழின் அல்லால், மற்றாங்கே பசும்புற்றலைகாண்பரிது" என்னும் உண்மையை உலகம் காண இவர் உணர்த்திநின்றார்.

"மன்னியசீர் இடைக்காடன் மாநிலத்திற் பாவத்தால்
புன்னிரண்டாண் டளவிலொரு பஞ்சம்வரும் விதந்தேறித்
தன்னிடத்தாட் டினங்களுக்குச் சமுத்திரத்தின் தண்ணீரும்
உன்னிவளர்உயிரியிலை உணவும் உணும்படி பழக்கி. (க)

வரகொடுமண்கலந்துசுவர் வைத்தொரு கோட்டையுஞ் சமைத்திட்
டுரமொடுவாழ்ந் தாட்டினங்கள் உரைந்துரைந்து சுவரடியில்
தரவருநல் லரிசியினைத் தனிப்பாலில் அட்டருந்திக்
காவில்சிவ யோகத்தாற் கண்துயின்றுங் களிகூர்ந்தான்." (உ)
(புலவர்புராணம்.)

மேற்குறித்தவுண்மை இதன்கண்ணும் விளங்கிநிற்றல்காண்க.

நின்று மழைமறுத்தால் நீளுலகில் மன்னுயிர்கள்
பொன்றும் ஒருங்கே பொரிந்து.

நிலம் உளதாயினும் மழையிலதாயின் அதனாற் பயனில்லை யென்பது இதனால் கூறப்பட்டது.

---

17. மண்டுகடல் பெற்றிருந்தும் வான்போயேன் பண்டுமழை
கொண்டுவந்தார் மூவர் குமரேசா—கொண்ட
நெடுங்கடலும் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின். (எ)

இ—ள்.

குமரேசா! மூவர் கடல்பெற்றிருந்தும் வான்போய் ஏன் பண்டு மழையைக் கொண்டுவந்தார்? எனின், தடிந்து எழிலிதான் நல்காதாகிவிடின், நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் என்க.

மூவர் என்றது சேர சோழ பாண்டியர் என்னும் மூவரசரை.

எழிலி = மேகம். நீர்மை = தன்மை. நல்கல் = கொடுத்தல்; ஈண்டுப் பெய்தலென்க. தடிந்து = முகந்து; நீரைவாரி என்றவாறு.

மேகமானது கடல்நீரைமொண்டு நிலத்தின்கட்பெய்யவில்லையானால் அக்கடலும் தன் தன்மைகுன்றும் என்பதாம்.

நிலத்துக்கே அன்றிக் கடலுக்கும் மழைவேண்டும் என்றபடி

மழையில்லையானால் நீர் நிறைந்த கடலிருந்தும் பயன் இல்லை என்பது கருத்து. இவ்வுண்மை மூவேந்தர்பாலும் ஒருகாலத்தில் காணப்பட்டது.

## கதை.

சேரநாடு சோழநாடு பாண்டிநாடு என்னும் இம்மூன்று நாடுகளும் ஒருகாலத்தில் மழைவளங்குன்றி வறுமைமிக்கிருந்தன. அதனால் துயர்பல தொடர்ந்தன. உயிர்கள் பல மாண்டன. அந்நாட்டு அரசர் மூவரும் இக்குறையை நினைந்தார். உளமிகநொந்தார். ஒன்றுசேர்ந்தார். நின்று சூழ்ந்தார். பின்பு அகத்திய முனிவரிடஞ் சென்றார். உற்றதை யுரைத்தார். அம்முனிவர்பெரு

மானும் கோள்கள் நிலைமாறியுள்ளமையைத் தெளிந்து, நீவிர் மூவரும் இந்திரனையெய்தி மழைவளங்கேண்மின் என்று பணித்தார். விண்ணுலகம் போதற்குரிய விரதமந்திரங்களையும் உபதேசித்தார். இவரும் அவற்றின்படி நடந்து வான்புகுந்தார். வானவர்கோனைக் கண்டார். மகிழ்ந்தார். அவ் அமரர்கோனும் இவர்களையாதரித்து வேண்டிய மழைவரம் விருப்புடன் தந்தான். விடைபெற்றிவரும் விரைவுடன் மீண்டார். மழை பெய்தது. தம்முடைய நாடுகள் நன்னிலையுற்றன. மன்னுயிர்யாவும் மகிழ்ச்சிமீக் கூர்ந்தன. கடல் நீர்இருந்தும் மழைநீர்க்காக இம்மன்னர் மூவரும் வானகம் புகுந்தனர். அதன்பின் இம் மூந்நாடுகளும் நன்னடுகளாய் நன்குசெழித்தன. "நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி தான்நல்கா தாகி விடின்," என்னும் உண்மையை உலகம் அன்று நன்கு உணர்ந்தது.

"கோமகன் நிகழுநாளில் கோள்நிலை பிழைத்துக் கொண்மூ
மாமழைமறுப்பப் பைங்கூழ் வறந்துபுற்றலைகள் தீர்ந்து
காமருநாடுமூன்றுங் கையறு வெய்த மன்னர்
தாமதுதீர்வுநோக்கித் தமிழ்முனி யிருக்கைசார்ந்தார். (1)

முனிவனையடைந்து வேந்தர் மூவருந் தங்கள்நாட்டில்
பனிவருமாரியின்றி வறந்தமை பகர மேருக்
குனிவருசிலையார்க் கன்பன் கோள்நிலை குறித்துநோக்கி
இனிவருமாரியில்லை யாதினால் என்னிற் கேண்மின். (2)

காய்சினவெய்யோன் சேயோன் முன்செலக் கதிர்கால்வெள்ளித்
தேசிகன்பின்புசென்று நடக்கும்இச் செயலான் முந்நீர்த்
தூசினஉலகிற் பன்னீ ராண்டுவான் சுருங்குமென்று
பேசினநூல்கள்; மாரிபெய்விப்போற் சென்று கேண்மின்.

(திருவிளையாடல்.)

மேற்குறித்த வுண்மை இதன்கண்ணும் விளங்குதல் காண்க.

வாழ்வித்த மாமழையே மன்னுயிர்கள் இன்னலுறத்
தாழ்வித்து நிற்குந் தணந்து.

மழையில்லையானல் கடலும் நிலைகுலையுமென்பது இதனல் கூறப்பட்டது.

18. வென்றி மதுரையில்முன் மெய்சிறப்பும் பூசனையும்
குன்றிநின்ற தென்னே குமரேசா—என்றும்
சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. (அ)

இ—ள்.

குமரேசா! முன்னம் மழையில்லாதபொழுது மதுரையில் பூசையும் சிறப்பும் ஏன் குன்றிநின்றன? எனின், வானம் வறக்கு மேல் வானோர்க்கும் ஈண்டுச் சிறப்பொடு பூசனை செல்லாதென்க.

சிறப்பு = திருவிழா. செல்லுதல் = நடத்தல். வறத்தல் = பெய்யாது புலர்தல். ஈண்டு = இவ்வுலகில். நித்தலும் செய்துவந்த வழிபாடுகளினேர்ந்த குற்றங் குறைகள் தீர முற்றிய நெறியோடு தெய்வம்பராவிச் சிறப்புச்செய்தலின் திருவிழா சிறப்புஎனநின்றது.

மழை பொழியாதாயின் இவ் வுலகத்தாரால் தேவர்கட்குச் செய்யப்படும் விழவும் பூசையும் நடவா என்பதாம்

தேவர்க்கும் என்பதில் உம்மை சிறப்புணர நின்றது. ஆலய வழிபாடுகள் குன்றும் என்றபடி.

மழை பெய்யவில்லையானால் தெய்வ வழிபாடுமுதலிய மெய் யறங்கள் யாதும் செய்யமுடியாதென்பது கருத்து. இவ்வுண்மை நெடுஞ்செழியன் காலத்தில் மதுரையில் காணப்பட்டது.

## கதை.

கண்ணகி காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த நெடுஞ்செழியன் என்னும் அரசர்பெருமான் கோவலனை ஆராயாமல் கொல்வித்தான். அத்தீவினையால் அவனது நாட்டில் மழை பெய்யவில்லை. அதனால் நகரிலும் நாட்டிலும் துயர்பல நிறைந்தன. வறுமையும் நோயும் பெருகி வளர்ந்தன. அக்காலத்தில் தெய்வங்கட்குச் செய்யத்தக்க சிறப்பும் பூசையும் செல்லாவாயின. வளமலி மதுரையும் பொலிவிழந் திருந்தது. இது நீங்கும் பொருட்டு அத்தீவினைகருப் பிராயச்சித்தம் ஒன்று செய்தார். அதன்பின் இங்கு மழைபெய்தது. விளைவுமுதலிய வளங்களெங்கும் விளங்கி நின்றன. தெய்வ வழிபாடுகள் சிறந்து தோன்றின. பூசையும் சிறப்பும் பொலிவுற நடந்தன. வானம் வறந்திருந்தபோது இழந்திருந்த விழவுமுதலிய

நலங்களெல்லாம் மழைபெய்தபின்பு செழித்து நின்றன. வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டுச் சிறப்பொடு பூசனை செல்லாது என்னும் உண்மை அன்று தெளிய நின்றது.

விண்பொய்த்து நின்றக்கால் மெய்யறங்கள யாவும்போய்
மண்பொய்த்து நிற்கு மருண்டு.

மழையில்லையானால் விழவும் பூசையும் உளவாகா என்பது இதனால் கூறப்பட்டது.

---

19. பண்டுபலர் நோன்பிழந்தார் பாண்டியனும் பாவலரைக்
கொண்டிலனேன் விட்டான் குமரேசா—கொண்டதொரு
தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். (கூ)

குமரேசா! பண்டொருகாலத்தில் பலர் தவத்தையிழந்தனர்; பாண்டியனும் புலவர்களைப் போற்றாமல் ஏன் கைவிட்டான்? எனின், வானம் வழங்காது எனின், தானம் தவம் இரண்டும் தங்கா என்க.

உம்மை அவனது வள்ளற்குணத்தை விளக்கி நின்றது. பலர் என்றது கௌதமர் முதலிய மாதவர்களை.

வானம் வழங்குதல் = மழைபெய்தல்.

வியன் உலகம் = அகன்ற உலகம். தங்குதல் = நிலைத்தல்.

மேல், மழையில்லையானால் விழவும் பூசையும் நடவா என்றார்; இதில், தானமும் தவமும் இலவாம் என்கின்றார்.

மழையில்லையானால் நெல் மணி முதலிய பொருள்கள் இவ்வுலகில் இலவாய் முடியும்; அதனால் ஒருபொருளை ஒருவருக்குக் கொடுத்தலாகிய தானம் தங்காதாயிற்று. எத்தகைய தவசிகளாயினும் உயிர் உடலில் நிலைத்திருத்தற்பொருட்டு உணவேனும் நீரேனும் சிறிது உட்கொள்ளல்வேண்டும்; அவ்வுணவும் நீரும் மழையில் வழியில்லை ஆதலால் தவம் தங்காதாயிற்று.

மழைபெய்யாதாயின் இவ்வுலகில் தானமும் தவமும் ஆகிய இரண்டறங்களும் நிலையா என்பதாம். தானம் நிலையாமை பாண்டியன்பாலும், தவம் நிலையாமை கௌதமர் முதலிய மாதவர்பாலும் காணப்படும்.

TQ 40 E+D43



## கதை

இற்றைக்கு இரண்டாயிர வருடங்கட்கு முன்னர் மதுரையம் பதியில் அரசர் பெருமானாகிய பாண்டியன் ஒருவன் இருந்தான். இவன் அருந்திறலும் பெரும் புலமையும் ஒருங்கு நிறைந்தவன். பல்லாயிரம் புலவர்களை ஒருங்குசேர்த்து ஆதரித்துவந்தான். வரு நாளில் அங்கு மழைபெய்யவில்லை. புலவர்களைப்பாதுகாக்க முடியாமல் அரசன் வருந்தினான். ஒருநாள் அவரை அழைத்தான். புலவீர்! "என் நாடு நலமடைந்தபின் வம்மின்; இப்பொழுது செழித்த நாட்டைச்சேர்மின்" என்று அவரனைவரையும் அனுப்பினான். பெருவள்ளலாயிருந்தும் மழையில்லாமையால் அவ் அறிஞரைப் போற்றமுடியாமலும், யாதொரு தானமும் செய்யமுடியாமலும் இம்மன்னர் பெருந்தகை மறுகியிருந்தான். வானம் வழங்காதெனின் தானம் தங்கா தென்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. (இஃது இறையனாரில் உள்ளது.)

## கதை 2.

கௌதமர் என்பவர் அநேகமுனிவர்களுடன் தென்திசையில் பிரமகிரியில் அருந்தவஞ் செய்துகொண்டிருந்தார், அக்காலத்தில் பலவருடங்களாக மழைபெய்யாது பொய்த்தது. உயிர்கள் பல மாண்டன. முனிவர்பலரும் தவநிலை குலைந்தார். பதைத்தார். பல திசைகளிலும் பிரிந்தகன்றார். கௌதமர்மட்டும் கலங்காமல் நின்றார். வருணனைக் கருதினார். இவரது தவமகிமையால் அவன் வந்தான். அவன்பால் இவர் மழைவேண்டினார். அவன் என்றுங் குன்றாத ஒரு நீர் நிலையை அருளிப்போயினான். அதனால் இவர் ஒழுக்கம்பேணி விழுப்பமொடு நின்று களிப்புற்று வாழ்ந்தார். வானம் வழங்கினாலன்றித் தவம் தங்காதென்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். இதன்விரிவை ஞானசங்கிதையில் காண்க.

வானம் வறந்தால் மதியழிந்து மன்னுயிர்கள்
தானம் மறந்து விடும்.

தானமும் தவமும் உலவாததற்கு மழையே காரணம் என்பது இதனால் கூறப்பட்டது.

20\. வானீர் இலாமையினால் மாதவரும் அத்திரிப்பேர்க்
கோனுமேன் நொந்தார் குமரேசா—ஊனமிலா
நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. (ய)

இ—ள்.

குமரேசா! அத்திரிமுனிவரும் மற்றைய மாதவரும் வான் நீர் இலாமையால் ஏன் வருந்தினார்? எனின், உலகு நீர் இன்று அமையாதெனின், வான் இன்றி ஒழுக்கு அமையாதென்க.

எவ்வகைப்பட்ட சிறப்பினை யுடையார்க்கும் என்பார், யார் யார்க்கும் என்றார். முற்றத்துறந்த முனிவரும் நீர் இல்லாமல் உலகில் ஒரு கருமமும் செய்யமுடியாதென்பதாம்.

நீரையின்றி உலகியல் நடவாதெனின் எத்தகையோர்க்கும் மழையில்லையானால் ஒழுக்கம் அமையாதென்பதாம்.

மழையில்லையானால் இவ்வுலகில் நீர் இல்லையாம்; அவ்வின்மை யால் எல்லா நன்மைகளும் பொன்றுமென்றபடி.

உலகியல் ஒழுங்காக நடைபெறுதற்கு நீரே காரணமென்பதும், அந்நீரும் மழையினாலேதான் உளதாகின்றதென்பதும், இம் மழையில்வழி யெத்தகையோர்க்கும் ஏதுவும் செய்ய முடியாதென் பதும் இதில் காட்டப்பட்டன. இவ்வுண்மை அத்திரி முனிவர் பால் காணப்படும்.

கதை.

முன்னொருகாலத்தில் காமதம் என்னும் வனத்தில் அத்திரி முனிவர் அருந்தவஞ் செய்து கொண்டிருந்தார். அவ்வனம் பசிய இலைகளையும் இனிய கனிகளையுமுடைய பலவகை மரங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. இளஞ்செடிகளும் செழுங் கொடிகளும் அதில் நிறைந்திருந்தன. விழுமிய முனிவர் பலர் குழுமியிருந்த னர். இங்ஙனம் இருந்துவருநாளில் பலவருடங்களாக உலகில் மழைபெய்யாது நின்றது. உயிர்கள்பலவும் மறுகிமாண்டன. புல் மரமெல்லாம் பொரிந்து கரிந்தன. குழுமிய முனிவரும் குலைந்து நடுங்கினர். ஐம்பத்துமூன்று வருடம் யோகத்திலிருந்த அத்திரி முனிவரும் தத்தளித்தார். விழித்தார். நீர்இன்மையை நினைந்தார்.

நெஞ்சுருகினார். சில வருடங்கள் கழிந்தபின் இறைவனருளால் மழை பெய்தது. அதனால் அளவில் இன்பம் அடைந்தார். உலகியலும் நலமுற நடந்தது. பொருளும் இன்பமும் பொருந்தி வளர்ந்தன. இதன் விரிவு சிவமகாபுராணத்தில் காணப்படும்.

உயிரின்றேல் நின்ற உடம்பேன்னும் அற்றே
உயர்மழை இன்றேல் உலகு.

எல்லாவற்றிற்கும் மழையே காரணம் என்பது இதனால் கூறப்பட்டது.

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

மழை அமிழ்தம்போல்வது. அது பலவகையிலும் உயிர்களுக்கு உதவி புரிகின்றது. மழை பெய்யாது மறுத்தால் பசி உயிர்களை நைய வருத்தும். மழைபொழியாதாயின் உலகில் உழவு தொழில்கள் நடவா. மழையே ஆக்கமும் கேடும் ஆக்கவல்லது. அஃதில்லையானால் உலகில் ஓரறிவுயிரும் இல்லை. மழை நீர் இன்றேல் கடல் நீரும் தன்னியல்குன்றும். மழைபொழியாதாயின் விழவும் பூசையும் நடவா. அஃதில்லையானால் தானமும் தவமும் இல்லை. அஃதுள்ளதானால் உலகியலும், உயிரொழுக்கங்களும் நன்கு நடைபெறும்.

# ௩-ம் அதிகாரம் நீத்தார் பெருமை.

அஃதாவது துறந்தாரது பெருமை. இறைவன் அருள்வழியொழுகி மழைபோல் எவர்க்கும் இனிய நீரராய் நின்று என்றும் உலகிற்கு இவர் இதஞ்செய்து வருவர் ஆதலால் அதன்பின் இது வைக்கப் பட்டது. மழை உலகினை வளம்பெறச் செய்யும்; இவர் உணர்வை உரம்பெறச்செய்வர் என்க.

"நீத்தாரைப் போற்றுதூஉம் நீத்தாரைப் போற்றுதூஉம்
நேத்திர மென்ன உலகை நெறிநிறீஇ
மூத்த அறிவினு னூற்பொருள் முறக்காட்டி
ஆத்தனையுங் காட்டிவிட லான்" எனவும், "மழையும் தவம் இலார் இல்வழியில்லை" எனவும், "நல்லாரொருவ ருளரேல் அவர் பொருட்டெல்லார்க்கும் பெய்யும் மழை" எனவும் வருவன ஈண்டெண்ணற்குரியன.

21. மண்டுபுகழ் மாணிக்க வாசகர்சீ ரைப்பனுவல்
கொண்டுபுகல் வானேன் குமரேசா—கொண்ட
ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு. (க)

குமரேசா! முற்றத்துறந்த மாணிக்கவாசகரது பெருமையை நூல்கள் ஏன் மகிழ்வுகொண்டு புகல்கின்றன எனின், ஒழுக்கத்துநீத்தார்பெருமை பனுவல்துணிவு விழுப்பத்து வேண்டும் என்க.

இது, துறந்தவரே எவரினும் சிறந்தவரென்கின்றது.

மண்டுபுகழ் என்றது மிகுந்த கீர்த்தியால் எங்கும் சிறந்துள்ளமை கருதி. மண்டுதல் = மிகுதல், நிறைதல். பனுவல் கொண்டு புகல் என்றது "நலமலி வாதவூர் நல்லிசைப்புலவ, மனநின்றுருக்கு மதுர வாசக, கலங்குறு புலனெறி விலங்குறு வீர" என்பனவாக நாலோர் பலரும் இவரது பெருமையை மேலாகமதித்துப் போற்றுதல் கருதி என்க. கொண்ட என்றது தத்தமக்குரித்தாக வரைந்துகொண்ட என்றவாறு.

நீத்தார் = துறந்தவர். அஃதாவது அகம் புறம் என்னும் இருவகைப் பற்றுக்களையும் அறவே விடுத்தவர். பனுவல்துணிவு = நூல்களின்முடிவு. விழுப்பத்து வேண்டும் = மேன்மையாக விரும்பும்.

தமக்குரிய ஒழுக்கத்தின் கண்ணே வழுவாது நின்று துறந்தாரது பெருமையை நூல்களின் துணிவு விழுமிதாக விரும்பும் என்பதாம்.

உறுதி நூல்களைச் செய்யும் அறிவுடையாரெல்லாரும் துறந்தவர்களது பெருமையையே எவற்றுள்ளும் மிகச் சிறந்தது என்று புகழ்ந்து போற்றிக்கொள்வர் என்பார் பனுவல் துணிவு விழுப்பத்து வேண்டும் என்றார். விழுப்பம் = சிறப்பு, மேன்மை.

உயர்ந்தா ரெவரும் விரும்பிப் போற்றுதற்குரிய பெருமை துறந்தார்க்கே யுண்டாம் என்பது கருத்து.

ஒழுக்கமுடையராய் நின்று துறந்தாரே பெரியர் என்பதும் அவரது பெருமையை எல்லா நூல்களும் விழுமிதாக விரும்பும் என்

பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை மாணிக்கவாசகர் பால் உணரப்படும்.

கதை.

மாணிக்கவாசக சுவாமிகள் சைவசமய குரவர் நால்வருள் ஒருவர். பாண்டிநாட்டிலே திருவாதவூரிலே அந்தணர் குலத்திலே அமாத்தியர் மரபிலே இவர் அவதரித்தார். இவருடைய தாயார் சிவஞானவதியார். தந்தையார் சம்புபாதாசிரிதர். இளமையிலேயே வேதங்கள் ஆகமங்கள் புராணங்கள் இதிகாசங்கள் முதலிய பலநூல்களையும் இவர் வழுவறக்கற்றார். நிறைந்த அறிவும் சிறந்த ஒழுக்கமும் பெற்றார். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்துவந்த அரிமர்த்தன பாண்டியனுக்கு இவர் அமைச்சராய் அமர்ந்தார். அவ் அரசன் இவருக்குத் தென்னவன் பிரமராயன் என்ற பட்டமும் தந்து சீர்கள் பலவுஞ் செய்தான். மதிநுட்பத்தோடு நின்று அவன் ஆட்சியை இவர் மாட்சிபெற நடாத்திவந்தார். இவரது பெருங்குணங்களைக்கண்டு அம்மன்னன் மகிழ்ந்து புகழ்ந்தான். அன்பு மிகுந்தான். ஆதரித்து வந்தான். ஆயினும், இவர் இம்மை மறுமையின்பங்களை வெறுத்துப் பேரின்பத்தையே நாடினார். ஒழுக்கநெறியில் நின்று வழுவாமல் ஒழுகினார். பின்பு துறவுற்றார். மெய்யுணர்வு பெற்றார். இருவகைப் பற்றுக்களையும் இகந்தார். இறைவன் திருவருளையெய்தி யின்புற்று நின்றார். இவ்வுண்மை,

"சுற்றமுந் தொடர்பும் நீத்தேம்; துன்பமும் இன்பும் அற்றேம்; வெற்றுடல் மானந்தீர்ந்தேம்; வெறுக்கைமேல் வெறுக்கைவைத்தேம்; செற்றமுஞ் செருக்குங் காய்ந்தேம்; தீவினை இரண்டும் தீர்ந்தேம்; கற்றைவார் சடையான் கோலங் காட்டியாட்கொண்ட அன்றே."

என்ற இவர் திருவாக்கால் நன்று தெளிவாம். வெறுக்கை = பொருள். இங்ஙனம் துறந்துநின்ற இவரது பெருமையைக் கச்சியப்பசிவாசிரியர், பரஞ்சோதி முனிவர், சிவப்பிரகாசர் முதலிய சிறந்த நூலாசிரியரெல்லாரும் தம் நூல்களில் வியந்து புகழ்ந்து விரும்பிப்போற்றியுள்ளார். திருவாதவூர்ப்புராணமுதலிய பலநூல்களும் இவரது பெருமையை விழுமிதாக விரும்பிப் பாடுகின்றன. ஒழுக்கத்து நீத்தார் பெருமையை நூல்களியாவும் மிகமேலாக விரும்பிநிற்கும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

வலமழு வுயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கருணைக் கடல்
முகந்துல குவப்ப உகந்த மாணிக்க
வாசகன் எனுமொரு மாமழை பொழிந்த
திருவா சகமெனும் பெருநீர் ஒழுகி
ஓதுவார் மனமெனும் ஒண்குளம் புகுந்து
நாவெனு மதகில் நடந்து, கேட்போர்
செவியெனு மடையிற் செவ்விதிற் செல்லா
உளமெனு நிலம்புக வூன்றிய அன்பாம்
வித்திற் சிவமெனு மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறு முத்தி மெய்ப்பயன் தருமே.
(நால்வர் நான்மணிமாலை.)

மழைபோல் நின்று இவர் உலகிற்கு உதவியுள்ள தன்மையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

மாமணிசேர் நூல்போல் வனப்பாம் உயர்ந்தார்தங்
காமருசீர் கூறுநூல் காண்.

நீத்தார் பெருமையையே நூல்கள் மேன்மையாக விரும்பும் என்பது இதனால் கூறப்பட்டது.

22. பண்டு கடல்பருகிப் பார்சமன்செய் மாதவன்சீர்
கொண்டதுணை யென்னே குமரேசா—கண்டு
துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று. (உ)

இ—ள்.

குமரேசா! கடலைக்குடித்து இவ்வுலகத்தைச் சமன்செய்த அகத்திய முனிவரதுபெருமையின் அளவு எவ்வளவு? எனின், துறந்தார்பெருமை துணைக்கூறின் வையத்து இறந்தாரை எண்ணிக் கொண்டற்று என்க.

இது துறவிகளின் பெருமை அளவிடலரிய தென்கின்றது.
பெருமை துணைக்கூறின் = பெருமையை அளவிட்டுச்சொல்லின். மேல், துறந்தார் பெருமையை நூலோர் மேலாக விரும்புவர் என்றார்; இதில், அவர் பெருமை அளவிடலரிய தென்கின்றார். இறு

கைப்பற்றுக்களையும் அறவே விட்டாரது பெருமையை அளவிட்டு ச்சொல்லத்தொடங்கின் இவ்வுலகத்தில் இறந்து போனவரை இத் துணையரென எண்ணி அறியலுற்றாற் போலும் என்பதாம்.

அப்பெருமை அளவிடமுடியாதென்பது குறிப்பு. கொண்டால் என்பது கொண்டு எனநின்றது. துறந்தவர் பெருமைக்கும் இறந்தவர் தொகைக்கும் அளவில்லை என்றவாறு.

இறந்தார் தொகை மேல் வைத்துத் துறந்தார் பெருமைக்கு இதில் வரம்பின்மை கூறினார்.

துறந்தார் பெருமை எத்துணைத்து என்று ஒருவன் அளந்தறிய விரும்பி மிகமுயன்றும் அளவிட முடியாமை கண்டு அடிகளிடம் வந்து அதன் அளவு எத்துணைத்து என வினவ அவனை நோக்கி இது கூறியதாகக் காண்க.

துறந்தார் பெருமையை உணர்த்தற்கு இறந்தார் தொகையை யெடுத்துக்காட்டியது பயனின்றி வறிதே கழிந்துபோன அவர் தொகை நாளும் வளர்தல் போல் பயனுற உறுதி பெற்று நின்ற இவர் பெருமை நாளும் மிகுதல் கருதி என்க.

முனிவரர் பெருமை அளவிடலரியது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அகத்தியர்பா லுணரப்படும்.

கதை

அகத்தியர் என்பவர் முற்றத்துறந்த முனிவரெவரினும் முதன்மை வாய்ந்தவர். முன்னொரு காலத்தில் பிரமன் ஒரு வேள்விசெய்தான். அதில் அமைந்திருந்த கும்பம் ஒன்றில் இவர் பிறந்து வந்தார். அதனால் உம்பரும் இம்பரும் இவரைக்கும்ப முனிவர் என்றழைத்தார். இருவகைப் புலவரும் இவரது பெரும்புகழைவிரும்பிப் போற்றுவர். இவர் செய்துள்ள அற்புதங்கள் அளவிடலரியன. இவர் ஏவலைச் செய்யத் தேவரும் ஆவலுறுவர். தேவர்கோனும் இவரது சாப மெய்தினன். திருமாலையும் சிவபெருமானாக இவர் செய்தாரெனின் வேறு கூறுவதென். திருக்குற்றாலத்து மாலடியார் இவரோடு மாறுகொண்டு வாதுபுரிந்த காலத்தில் இவர் வைணவ வேடங்கொண்டார். ஆலயத்துட் புகுந்தார். திருமால் வடிவோடு அங்கு எழுந்தருளியிருந்த மூர்த்தியைக் கண்டார். அணுகினார். வைணவவேதியர் பலருங்காண அம் மூர்த்தியின் முடிமேல் தமது செங்கையை வைத்தார். சிவமாகச் சிந்தித்தார். உடனே,

முறுகுவலம் புரிக்கரத்து மான்குறுகப் பெரியதுழாய் முடியின்மீது
சிறியமதிக் கலைகுறுகத், திலகநுதல்விழிகுறுகச் செழும்பூண்மார்பில்
நிறையரவப் பணிகுறுக, நிகிலவுல கமுநிறைந்து நீண்டமேனி
குறுகுகுறு கெனப்பரவித் திருவடிக்கீழ்க் குறுமுனிவன் குறுகுங்
காலை. (1)

தவம்பெருக அறம்பெருகப் பொருள்பெருகத்தெருள்பெருகச் சைவம்ஓங்கச்
சுவம்பெருக மநுநீதித் துறைபெருக நிறைபெருகச் சுருதிவாய்மை
நவம்பெருகச் சரியாதி சதுட்டயங்கள் நனிபெருக ஞாலமெல்லாம்
சிவம்பெருகக் குறுகியருள் பெருகினுன் குற்ருலத் தேவதேவன். (2)

வேறு.

சித்திறுற் கரும்பொன்மேனி செம்பொனும் படிபோற்கும்பன்
பத்தியால் உருகி மாலாம் படிவனே பரமனுனன்;
சத்துடன் அசத்துமாகிச் சதசத்து மானஞான
நித்திய நிமலானந்த நிட்கள சகளமூர்த்தி. (திருக்குற்ருலத்தலபுராணம்)

இதனுல் இவரது அற்புதத் தவவன்மை அறியலாகும்.

கடல்குடித்த கதை.

விருத்திரன் என்னும் அசுரன் இந்திரனேடு பெரும்போர்புரிந்தான். முடிவில் ஆற்ருமல் கடல்புக்கொளிந்தான். இந்திரன் அகத்தியரை அணுகி அதனை அறிவித்தான். முனிவர் கடல் நீரைக் கையிலேந்தி முற்றவும் வற்றப்பருகி அவ்வசுரனை அமரர் கோனுக்குக் காட்டினர். அவனுங் கண்டான். குலிசத்தால் அவனைக்கொன்ருன். வென்றி கொண்டான். முனிவரும் பருகியகடலை மீண்டு உமிழ்ந்தார். அனைவரும் கண்டார். அன்புடன் வியந்தார்) இதன் விரிவைத் திருவிளையாடற் புராணத்தில் காண்க.

பார்சமன் செய்தது.

இறைவனது திருக்கலியாண கோலத்தைத் தரிசிக்கும்பொருட்டு எல்லாவுயிர்களும் இமயம் சார்ந்தன. அதனுல் வடதிசை தாழ்ந்தது. உலகம் தனது நிலைகுலைந்தது. உயிர்கள் அஞ்சி அலமந்தன. தேவர்களும் தியங்கினர். மாதவர்களும் மயங்கினர். மேருவுந் தளர்ந்தது. சேடனுங் கலங்கினன். அப்பொழுது எல்லாம் வல்ல இறைவன் மகத்துவமிகுந்த நமது அகத்திய முனிவரை நோக்கினர். முனிவர் திலகமே! இங்கு வருக வென்றழைத்தார். இவரும் வந்து வணங்கினர். அருந்தவமிகுந்த பெருந்தகையே! நீ தென்திசை சென்று பொதிகையில் நின்ருல் இவ்வுலகம் சமமாய்

நிலைபெறும்; உயிர்களும் நலமுறும்; என்று பரமன் பணித்தார். முனிவரும் அப்பணியைத் தலைமேற்கொண்டார்; திருவுருவை உள த்தில் சிந்தித்தார். தென்திசை நோக்கி நடந்தார். பொதிகை மலையை வந்து நண்ணினார். நண்ணலும் உலகம் சமமாய் நிலையுற் றது. வருதிய உயிர்களும் மகிழ்ந்திருந்தன தேவர்முதலிய யாவ ரும் குறுமுனியின் பெருமையை வியந்து புகழ்ந்தார். இதனால் அளவிடலரிய பெருமை நமது முனிவர் பால் அமைந்துள்ளமை தெளியப்படும்.

பொதியம தென்னும் வெற்பில் புனிதமா முனிவன்வைகத்
துதியுறு வடபாற் றென்பாற் புவனியோர் துலைபோலொப்ப
அதுபொழு துயிர்களானோர் அணங்கொரீஇ அரணையேத்தி
மதிமகிழ்ந் தமர்ந்தார் தொல்லை வதுவையின் செய்கைசொல்வாம்.

அணங்கு = வருத்தம். ஒரீஇ = நீங்கி. (கந்தபுராணம்.)

மேற்குறித்த வுண்மை இதன்கண்ணும் விளங்குதல் காண்க. இங்ஙனம் அளவிடலரிய மாட்சியோடு இவர் அமைந்து விளங்கினார். துறந்தார்பெருமையை எண்ணி யறியமுடியாதென்னும் உண்மை யை உலகம் இவர்பாலுணர்ந்து நின்றது.

வானுலக மெல்லாம் வரைந்தாலுங் கோளுமோ
ஞானி உயர்வி னலம்.

துறந்தார் பெருமை வரம்பிடலரிய தென்பது இதனால் கூறப் பட்டது.

23. பண்டு துறவுகொண்ட பட்டினத்தார் மாண்புலகில்
கொண்டதுயர் வென்னே குமரேசா—கண்ட
இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. (௩)

குமரேசா! துறவறம் பூண்ட பட்டினத்தார் பெருமை ஏன் உலகில் உயர்ந்துவிளங்கியது? எனின், இருமை வகைதெரிந்து ஈண்டு அறம்பூண்டார் பெருமை, உலகு பிறங்கிற்று என்க.

இது, துறந்தவர்பெருமையே இவ்வுலகில் உயர்ந்த தென்கின்றது.

இருமை என்றது பிறப்பு வீடு என்னும் இரண்டனை. வகை தெரிதலாவது அவற்றின் துன்ப இன்பக் கூறுபாடுகளை முறையே ஆராய்ந்தறிதல். ஈண்டு அறம் என்றது துறவறத்தை.

உலகு பிறங்கிற்று = உலகின்கண் உயர்ந்தது. பிறங்குதல் = மிகுந்துவிளங்குதல்.

துன்பந்தோன்றின் எவரும் துறந்து ஏகராய்த்தனித்தே இன்பந்தேடல் இயற்கை ஆதலால் இருமை வகைதெரிதலே துறவு பூணுதற்கு ஏதுவாயிற்று. ஈண்டு = இவ்விடத்தே; என்றது இப்பிறப்பின் கண்ணேயே என்றவாறு.

மேல், துறவிகள் பெருமை அளவிடமுடியாதென்றார்; இதில், அதுவே இவ்வுலகில் உயர்ந்தது என்கின்றார்.

பிறப்பு பிறவாமை என்னும் இரண்டினது துன்ப இன்பக் கூறுபாடுகளை ஆராய்ந்தறிந்து இவ்விடத்தே துறவறத்தை மேற் கொண்டவரது பெருமையே உலகில் மிக உயர்ந்தது என்பதாம்.

உலகப்பொருள்கள் முழுவதுமுடைய அரசர் பெருமையினும் அவற்றை முற்றவுந்துறந்த முனிவர் பெருமையே சிறந்ததென்றவாறு. இருமை வகைதெரிதலே துறவு பூணுதற்கு ஏதுஎன்பதும், அங்ஙனம் பூண்டவர் பெருமையே புவியில் சிறந்ததென்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை பட்டினத்துப் பிள்ளையார் பால் உணரப்படும்.

## கதை.

பட்டினத்தார் என்பவர் உத்தமத் துறவுபூண்ட ஒரு தத்துவ ஞானி. இவர் பிறந்தவூர் காவிரிப்பூம்பட்டினம். வணிககுல திலகரான இவர் சென்னையில் வசித்திருந்தாராதலால் பட்டினத்தார் என விளங்கி நின்றார். இவரது பிள்ளைத்திருநாமம் திருவெண்காடர் என்பதே. இவர் பல மரக்கலங்களுக்குத் தலைவராய்விளங்கினார். இவர் கலங்கள் கலவாக் கடல்களேயில்லை. மறுபுலத்தவரொடும் வாணிகஞ்செய்தார். அரசரும் விரும்பும் பெரும்பொருள் பெற்றார். உலகபோகங்களுக்குரிய எல்லாநலங்களும் இவர்பால் ஒருங்கே அமைந்திருந்தன. வணிகமுறையில் இவரது பெரும்புகழ் எங்கும் பரவிநின்றது. இம்மையின்பங்களில் இவர் மனம் செம்மையாக அழுந்தியிருந்தது. இங்ஙனம் இருந்துவரும்நாளில் இவர் பண்ணி

யிருந்த புண்ணியபலத்தால் ஒரு பெரியவர் இவர்பால் நண்ணினார். தம்பால் வந்த அந்தச்சந்நியாசியை இவர் நன்றாக வுபசரித்தார். அன்புசெய்தார். உலக இன்பத்தில் இவர்மனம் ஊன்றிநிற்குந்தன்மையை அப்பெரியவர் ஓர்ந்தார். உண்மையான இவரது பரிபக்குவத்தையும் தெளிந்தார். ஒரு முறியில் ஒரு சிறு வாக்கியத்தை எழுதி இவர் மனைவிபால் தந்து இவரிடம் சேர்க்கும்படி கட்டளையிட்டுச் சென்றார். துறைமுகம்போயிருந்த இவர் மனையகம் புகுந்தார். உண்டுமகிழ்ந்தார். அப்பொழுது மனைவி விநயமாக அம்முறியினை இவரிடம் தந்தாள். தந்ததைவாங்கித் தனியே நோக்கினார். அதில் "காதற்றஊசியும் வாராதுகாணும் கடைவழிக்கே" என்று எழுதியிருந்தது. அதன்கருத்தைத் தமது கருத்தில் இருத்தினார். சிந்தித்தார். பிறவியிலுளவாகுந் துன்பக் கூறுபாடுகளையும், வீட்டில் நிலவும் இன்பநலங்களையும் நன்குதெளிந்தார். அரும்பொருளனைத்தையும் விடுத்தார். துறவறம் பூண்டார். அதன்பின் இவரது பெருமை உலகமெங்கும் பரவி ஓங்கி உயர்ந்தது. இவரது சிறந்ததுறவைக்குறித்து நூல்கள்பலஉவந்து கூறுகின்றன.

"பட்டினத்துப் பிள்ளையைப் போல் யாரும் துறக்கை
அரிது அரிது" (தாயுமானவர்.)

"பட்டினத்துப் பிள்ளையினைப் பத்திரகிரி யைப்பரவி
விட்டுவிட மாட்டார் வெறுவீடர்." (ஒழிவிலொடுக்கம்)

இன்னவாறு எல்லாரும் போற்ற இவர் பெருமை எங்கும் விளங்கியுள்ளது. இருமை வகைதெரிந்து ஈண்டறம்பூண்டார் பெருமை பிறங்குமென்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

முற்றத் துறந்த முனிவோரை வானவரும்
உற்றுப் பணிவ ருவந்து.

துறவியின் பெருமையே யிவ்வுலகில் உயர்ந்ததென்பது இதனால் கூறப்பட்டது.

---

24. கொண்டபொறி கொண்டொன்றும் கொள்ளாத நம்மாழ்வார்
கொண்டனர்வீ டென்னே குமரேசா—கொண்ட
உரனென்னும் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. (ச)

இ—ள்.

குமரேசா! பொறிகளால் புலன்களைக் கொள்ளாத நம்மாழ்வார் ஏன் வீட்டின்பத்தைக் கொண்டார்? எனின், உரன் என்னுந்தோட்டியான் ஓரைந்துங்காப்பான் வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து என்க.

உரன் = அறிவு. தோட்டி = யானையையடக்குங் கருவி. அஃது அங்குசம் எனப்படும். ஓர் ஐந்து என்றது மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளை.

வரன் என்னும் வைப்பு = மேலான இடம்; அஃதாவது முத்தி நிலம்.

அறிவென்னும் அங்குசத்தால் ஐம்பொறிகளையும் அடக்கிக் காப்பவன் முத்தி நிலத்திற்கோர் வித்தாவன் என்பதாம்.

அறிவைத் தோட்டி என்று உருவகஞ் செய்தமையால் ஐம்பொறிகளும் யானைகளாகக் கொள்ளப்பட்டன. புலன் மீறிச்செல்லும் பொறிகளை மதமீறிச்செல்லும் யானைகளாகக் கருதி இது கூறினார். ஐம்பொறிகளையும் அடக்கினவனே முத்திநிலத்தில் முளைத்துக் கிளைத்து விளங்குவான் என்பார் "ஐந்துங்காப்பான் வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து" என்றார். ஓர் என்பது அருமையை யுணர்த்திற்று.

முத்திநிலத்துக்கு வித்துஎன்றதனால் இந்தநிலத்தில் வந்து பிறந்து வருந்தான் என்பதாம். சிற்றின்பத்தில் சிந்தையைச் செலுத்தாதவன் பேரின்பத்தில் நின்று பெருமையடைவான் என்றபடி.

பொறிகள் எப்பொழுதும் புலன்களையே நாடிச்செல்லும் என்பதும், அறிவால் அவற்றை யடக்கவேண்டும் என்பதும், அங்ஙனம் அடக்கினவனே வீட்டினை யடைவான் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை நம்மாழ்வார்பால் உணரப்படும்.

## கதை.

நம்மாழ்வார் என்பவர் இற்றைக்கு ஐயாயிரஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே, திருநகரி என்னும் திருக்குருகூரிலே வேளாளவருணத்திலே சிறந்திருந்த காரியார்க்கும் உடைய நங்கையார்க்கும் புத்திரராய் வந்து அவதரித்தார். இவர் கருவிலே திருவுடையவர். தெய்வத்தன்மை நிறைந்தவர். ஆன்மா உடலோடு இவ்வுலகில் உருவாகத் தோன்றியவுடனே ஒருவித வாயு வந்து அதனைப் பற்றும். அப்பற்றுதலால் அது தனது முறை அறிவை

யும், பெருமையையும் இழந்து அவிச்சையின் வயப்படும். அதன் பின் அழுதல் அரற்றல் பருகுதல் முதலியவற்றைச் செய்து உலக வாசனையையெய்தும். இது சடவாயு எனப்படும். இவ்வாயு தனது இயல்பால் இவர் தோன்றியவுடனே இவரையும் தொடுதற்கு வந்தது. தன்னை அணுகுமுன்னரே இவர் அதனை உங்காரத்தால் அதட்டி ஓட்டினர். அதனால் இவர் சடகோபர் என்னும் பெயரை யெய்தினர். மாறனர் என்பதுதான் இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர். வேறுபாட்டமின்றி உலகியலுக்குமாறாக இருந்தமையால் இவருக்கு இப்பெயர் இடப்பட்டது. இவரதுபிறப்பும் இருப்பும் வளர்ச்சியும் மிக்க அற்புதமுடையன. பதினாறுபருவம் வரையும் கண்விழியாமல் இவர் மௌனமாயிருந்தார். ஓதாதனைத்தையும் ஒழிவறவுணர்ந்தார். தத்துவ வுணர்வை முற்றவும் பெற்றார். திருமாலடிக்கே பெருமால் கொண்டார். அவரது அடியாரெவரினும் முடியாய் நின்றார். பகவானது கலியாணகுணங்களாகிய அமுத வெள்ளத்தில் ஆழ்ந்திருப்பவ ராதலால் மாலடியவர் ஆழ்வார் எனப்பட்டார். அவரெல்லாருள்ளும் பிரித்துப் பெருமானால் இவர் நம் ஆழ்வார் என்று அழைக்கப்பட்டார். திருமாலும் தமது மலர் வாய்திறந்து "நம்" என்னும் அடைகொடுத்து இவரை அழைத்தார். அதுமுதல் இவர் நம்மாழ்வார் என்னும் நற்பெயர் பெற்றார். இஃதொன்றே இவரது பெருமையை மிக நன்கு விளக்கும். இவர் பொறிகளைப் புறத்திற் செலுத்தாமல் பரத்திற் செலுத்தினர். அதனால் பிறவி தீர்ந்தார். முத்திபுலகில் நித்தராய் முளைத்தார். தத்துவ வித்துக்களெவரும் இவரை நித்தியமுத்தரென நித்தலும் புகழ்வர். திருநகரியென்னும் ஊர் இவர் அவதரித்தபின்னர் ஆழ்வார் திருநகரி என்று வழங்கி வருகின்றது. உரன் என்னுந் தோட்டியான் ஓரைந்துங்காப்பான் வரனென்னும் வைப்பிற்கோர் வித்து என்னும் உண்மையை உலகம் காண இவர் உணர்த்திநின்றார்.

போதமுட னின்று பொறியடக்கும் புண்ணியரே
சாதல் பிறப்பற்றார் தாம்.

ஐம்பொறிகளை யடக்கினவனே வீட்டினை யடைவான் என்பது இதனால் கூறப்பட்டது.

25. மாதவத்துக் கோதமன்றன் வாய்மொழியின் வன்மையெவர்
கோதலக் கண்டார் குமரேசா—பூதலத்தில்
ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி. (ரு)

இ—ள்.

குமரேசா! கோதமனது வலிமையைக் குற்றமறக்கண்டார் யாவர்? எனின், ஐந்தவித்தான் ஆற்றலுக்கு அகல் விசும்பு உளார் கோமான் இந்திரனே சாலுங்கரி என்க.

கோமான் இந்திரன்—இருபெயரொட்டு. கரி = சான்று.

ஐந்து அவாக்களையும் அவித்தானது ஆற்றலுக்கு அகன்ற வானத்துள்ள அமரர் கோமானாகிய இந்திரனே அமையுஞ் சான்று என்பதாம்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் புலன்கள் மேற் செல்கின்ற அவா ஐந்தையும் அடக்கினனது பெருமையும், அவற்றையடக்காதவனது சிறுமையும் கூறுவார் ஐந்தவித்தான் ஆற்றற்கு இந்திரனே கரிஎன்றார். ஐந்து என்பதில் முற்றும்மையும், ஆற்றல் என்பதில் குவ்வுருபும் தொக்கு நின்றன. ஏகாரம் சாட்சியின் தனி மாட்சி தோன்ற நின்றது.

இங்கு ஐந்தவித்தான் என்றது கௌதமரை. இவரது வலிமையை உலகிற்கு நன்கு காட்டினன் இந்திரனே ஆதலால் அவனைச் சாலுங்கரி என்றார்.

ஐந்தவித்தானுக்கே அளவில்லாத ஆற்றல்உளதாம் என்பதும், வேறு ஒருவன் எவ்வகை ஆற்றலையுடையனாயினும் அவனுக்கு ஈடாகான் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கோதமர்பாலும், இந்திரன் கண்ணும் காணப்படும்.

கதை.

கோதமர் என்பவர் பெருந்தன்மை நிறைந்த ஓர் அருந்தவர். நெறிதிறம்பாத நீர்மையர். மாசற்ற மனமுடையவர். இவர் அகலிகை என்னும் மனைவியோடு மகிழ்ந்து வாழ்ந்திருந்தார். அவள் அழகனைத்தும் ஒருங்கே குடிகொண்ட திருமேனியை உடையவள், உத்தமகுணங்கள் முற்றும்வாய்ந்தவள். இந்திரன் இவள்மீது பெரு

ங்காதல் கொண்டான். இவளது அழகென்னும் பெருங்கடலில் விழுந்து கரைகாணுது வருந்தினுன். எவ்வகையிலும் இவளைக் கலந்து இன்புறவேண்டுமென்று கருதினுன். கலங்கினுன். தெய்வ போகங்கள் அனைத்தையும் வெறுத்தான். அயலொன்றையும் நாடான். மயலேயே கொண்டான். பலகாலமும் முயன்முன். ஒரு நாள் நடுநிசியில் முனிவரது ஆச்சிரமத்துக்கு வந்தான். கோழி போல் கூவினுன். விடிந்ததுபொழுது என்று கருதி முனிவர் எழுந்தார். காலைக் கருமங்களைச்செய்ய நீர்நிலையை நோக்கிப் போனர். உடனே இந்திரன் முனிவர் உருவங்கொண்டான். உள்ளே புகுந்தான். பேதை அகலிகையும் பேதந் தெரிந்திலள். தனது கணவனென்றே முழுதும்நம்பினுள். கள்ள இந்திரனும் மெள்ள நெருங்கினுன். அகலிகையை அணைந்தான். அவளும் இணங்கினுள். இருவரும் கலந்தார். இன்பந்துய்த்தார். நீர்நிலையைநோக்கிச் சென்ற கௌதமர் உரியகாலம் வரவில்லை என்றுணர்ந்தார். மனையில் நிகழும் வினையைத் தமது ஞானத்தால் தெளிந்தார். விரைந்து மீண்டார். புகுந்தார் மனையுள். வந்தனர் முனிவரென் றிந்திரன் கண்டான், உள்ளம் கலங்கினுன். உடலும் நடுங்கினுன். புரந்தரன் பயந்து ஒரு பூனையாய் ஓடினுன். முனிவர் பெருங்கோபங் கொண்டார். அவன் உடல் முற்றும் பெண்குறிக ளாகக் கடவதென்று சபித்தார். அவையெல்லாம் அவ்வாறே யுடனே அவனுடலில் வந்தமைந்தன. திரும்பினுர். அங்கங்குலைந்த அகலிகையை நோக்கினுர். சீறினுர். நீ பொல்லாதது புரிந்தாய். ஆதலால் கல்லாகுக என்று சபித்தார். சபிக்குமுன் கணவன் காலில் அகலிகை விழுந்தாள். அறியாமல அடியாள் அரும்பிழை செய்தேன். இதற்கொருமுடிவை எனக்கருள் என்முள். தசரதராமன் திருவடித்துகள் படுமேல் இக்கல்லுருவம் நீங்கி நல்லுருப் பெறுவாய் என்று கௌதமர் கருணை செய்தார். அதன்பின் மனையை யிகந்தார். வனமே புகுந்தார்.

இவ்வுண்மை யிதனடியில் வருகின்ற கவிகளில் இனிது தெளியப்படும்.

> தையலாள் நயனவேலும் மன்மதன் சரமும்பாய
> உய்யலாம் உறுதிநாடி யுழல்பவன் ஒருநாளுற்ற
> மையலால் அறிவுநீங்கி மாமுனிக்கு அற்றஞ்செய்து
> பொய்யிலா உள்ளத்தான்தன் உருவமே கொண்டுபுக்கான். (1)

புக்கவளோடும் காமப் புதுமண மதுவின்றேறல்
ஒக்கவுண் டிருத்தலோடும் உணர்ந்தனளுணர்ந்த பின்னும்
தக்கதன் றென்னவோராள் தாழ்ந்தன ளிருப்பத்தாழா
முக்கணன் அனையஆற்றல் முனிவனும் முடுகிவந்தான். (2)

சரந்தரு சாபமல்லால் தடுப்பருஞ் சாபம் வல்ல
வரந்தருமுனிவ னெய்த வருதலும் வெருவி மாயா
நிரந்தரம் உலகில் நிற்கும் நெடும்பழி பூண்டாள்நின்றாள்
புரந்தரன் நடுங்கி யாங்கோர் பூசையாய்ப்போகலுற்றான். (3)

தீவிழி சிந்தநோக்கிச் செய்ததை யுணர்ந்து செய்ய
தூயவன் அவனைநின்கைச் சுடுசரம் அனையசொல்லால்
ஆயிர மாதர்க்குள்ள அறிகுறி உனக்குண்டாகென்
றேயினன் அவையெலாம்வந் தியைந்தன இமைப்பின்முன்னம். (4)

எல்லையில் நாணமெய்தி யாவர்க்கும் நகைவந் தெய்தப்
புல்லிய பழியினோடும் புரந்தரன் போயபின்றை
மெல்லிய லாளைநோக்கி விலைமக ளனையநீயும்
கல்லிய லாதியென்றான் கருங்கலாய் மருங்குவீழ்வாள். (5)

பிழைத்தது பொறுத்தல் என்றும் பெரியவர் கடனேஎன்பர்
அழற்றருங் கடவுளன்னாய் முடிவிதற் கருளுகென்னத்
தழைத்துவண் டிமிருந் தண்டார்த் தசரத ராமன் என்பான்
கழற்றுகள் கதுவ இந்தக் கல்லுருத்தவிர்தி யென்றான். (6)

(இராமாயணம்.)

மிதிலைக்கு வரும்வழியில் இராமன்பால் விசுவாமித்திரர் அகலிகைசரித்திரத்தை யிவ்வாறு கூறினர். எனவே யிது இராமாவதாரத்துக்கு வெகுகாலத்துக்கு முன்னரே நிகழ்ந்துள்ளமை பெறப்படும். தவ வலியானது தெய்வ வலியிலும் சாலச் சிறந்ததென்பது இதில் காணப்பட்டது.

பிறப்பால் மனிதனாயினும் ஐந்து அவித்தவன் இந்திரனிலும் சிறந்தவன் என்பது குறிப்பு,

ஆதி பகவன் அருள்போல் அமைந்தென்றும்
மாதவர்கள் நிற்பர் மகிழ்ந்து.

கௌதமனது பெருமைக்கும் இந்திரனது சிறுமைக்கும் ஏது இதனால் காணப்பட்டது

26 வீடுமனுர் மெய்த்தவத்தை மேவினர் சந்தனுவேன்
கூடினன் காமம் குமரேசா—நாடிச்
செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். (௬)

இ—ள்.

குமரேசா! வீடுமன் மனத்தையடக்கித் தவத்தைச் செய்தான்; சந்தனு என் அதனை அடக்கமாட்டாமல் காமத்தைக் கூடினன்? எனின், பெரியர் செயற்கு அரிய செய்வார்; சிறியர் செயற்கு அரிய செய்கலாதார் என்க.

இது, பெரியவர் தன்மை இன்னதாம் என்கின்றது.

செய்தற்கு அரியனவற்றைச் செய்வாரே பெரியர்; அங்ஙனம் செய்யமாட்டாதார் சிறியரேயாவர் என்பதாம்.

அறியது, ஐம்பொறியடக்கம். எளியது, அஃதின்மை. மனம் போனபடியெல்லாம் போய்த்திரிவார் சிறியர்; அங்ஙனம் இழிந்து திரியாது அறிவறிந்து பொறியடக்கி ஞானசீலராய் அமைந்திருப்பார் பெரியர் என்றவாறு.

செயற்கரிய செய்வார் பெரியர் எனப்பொதுவாகக் கூறியுள்ளபடியால் இதுதான் செயற்கு அரியது, இதுதான் செயற்கு அரியது என ஒவ்வொருவருந் தத்தமக்கு வேண்டியவாறே கூறலாம்; ஆயினும் பிற்காலத்துப் பெரியாரொருவர் அதனை வரையறுத்துளார். அஃது இதனடியில் வருகின்றது.

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்;
 கரடிவெம் புலிவா யையும்
கட்டலாம்; ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்;
 கட்செவி யெடுத்தாட்டலாம்;
வெந்தழலின் இரதம்வைத் தைந்துலோ கத்தையும்
 வேதித்து விற்றுண்ண லாம்;
வேறொருவர் காணாமல் உலகத் துலாவலாம்;
 விண்ணவரை யேவல் கொளலாம்;
சந்ததமும் இளமையோ டிருக்கலாம்; மற்றொரு
 சரீரத்தி னும்புகுதலாம்;

சலமேல் நடக்கலாம்; கனல்மே லிருக்கலாம்;
தன்னிகரில் சித்திபெறலாம்;
சிந்தையை யடக்கியே சும்மா இருக்கின்ற
திறம் "அரிது" சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோமயானந்தமே. (தாயுமானவர்.)

கட்செவி = பாம்பு.

செயற்கு அரியது இது வென்பது இதனால் இனிது புலனும்.
பெருமைக்கும், சிறுமைக்கும் உரிமையான உண்மைக்கருவியை
இதில் ஒருங்குணர்த்தினர்.

கல்வி செல்வம் குலம் அதிகாரம் பருவம் உருவம் முதலியவை
ற்றால் சிறிய ராயினும் அரியன செய்வரேல் அவரே பெரியர்
என்பதும், அவற்றால் பெரிய ராயினும் அரியன செய்யாரேல்
அவர் சிறியரே என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்
மை வீடுமர்கண்ணும், சந்தனுபாலும் உணரப்படும்.

## கதை.

சந்தனு என்பவன் சந்திரகுல வேந்தன். வருணனது கூறாய்
வந்து பிறந்தவன். இப்பரதகண்டத்தில் அத்தினபுரியில் இருந்து
அரசுபுரிந்தான். பேரழகும் வீரமும் ஒருங்கே உடையவன். கங்கை
என்னும் தெய்வமகளை மணந்து வீடுமன் என்னும் மெய்மகனைப்
பெற்றான். மகனும் பருவமடைந்து மதனெனத் திகழ்ந்தான்.
இங்ஙனம் வருநாளில் ஒருநாள் சந்தனு வேட்டைமேற்சென்றான்.
யமுனா நதியை யணுகினான். அங்கே மச்சகந்தியைக் கண்டான்.
அவள் அந்நதியில் நாவாய் விடுகின்ற பரதவர்பதியின் மகள். அவ
ளது திருமேனியின் நறுமணம் வெகுதூரம் சென்று வீசுகின்ற
படியால் யோசனகந்தி எனவும், பரிமளகந்தி எனவும் அவள் புகழ்
பெற்றிருந்தாள். அரசன் அவளைக் காதலித்தான். மணஞ்செய்
யக் கருதினான். தனது கருத்தை அவளது தந்தைக்குணர்த்தி
னான். நின் முதன் மகன் இருப்ப என்புதல்வியை நல்கேன் என்று
தந்தை மறுத்தான். இவன் மனம் தளர்ந்தான் உடல் மெலிந்
தான். நகரையடைந்தான். மாளிகையிற்புகுந்து வாடியிருந்தான்.
இளவரசாகிய வீடுமன் தந்தையின் நிலைமையை வினவி யறிந்தான்.

பரதவர்பதிபாற் சென்றான். பாட்டா! என்று விளித்தான். நின் மகளே எனக்குத்தாய் என்றான். இத்தாய்வயிற்றில் தோன்றிய புதல்வர்கட்கே அரசுரிமையுண்டு. எனக்கு அது வேண்டாம். என்றும் மணத்தை யான் இனிச்செய்யேன். என்னும் உறுதியை முன்னே கூறினான். பரிமளகந்தியைக் கொணர்ந்தான். தந்தைக்கு மணமுடித்தான். தந்தையின் பொருட்டுத் தான் ஐம்பொறி யடக்கினான். அரிய விரதத்தை உரியவாக் கொண்டான். சந்தனு அவளை மணந்தான். இன்பந் துய்த்தான்.

"இளையர் முதியர் எனஇருபால் பற்றி
விளையும் அறிவென்ன வேண்டா—இளையனாய்த்
தன்தாதை காம நுகர்தற்குத் தான்காமம்
ஒன்றாது நின்றான் உளன்."

என யாவரும் உளமகிழ்ந்துபோற்ற அக்குலமகன் புகழ்மிகுந்து நின்றான். பருவத்திற் சிறியராயிருந்தும் அரிய செய்து வீடுமர் பெரியர் ஆயினார். அதிற் பெரியராய் இருந்தும் சந்தனு எளிய செய்து சிறியராயினர். இதன் விரிவைப் பாரதத்தில் காண்க.

**தன்னுள்ளங் காப்பர் தகவோர் தகவிலார்
பின்னோடி வீழ்வர் பிழை.**

செயற்கரிய செய்து வீடுமர் பெரியாராயினர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

27. உற்ற சுகன்பால் உலகொடுங்கி நிற்கவென்
கொற்றமுற்ற தென்னே குமரேசா—முற்றும்
சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. (எ)

இ—ள்.

**குமரேசா!** உலகமானது சுகமுனிவரது அறிவில் அமைந்து நிற்ப அவர்மேன்மையுற்றது என்னே? எனின், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின்வகை தெரிவான் கட்டே உலகு என்க.

தெரிவான் கட்டே = தெளிந்தவன் கண்ணதே. பிறர் கண் இல்லையென்பது தோன்ற நின்றமையின் ஏகாரம் பிரிநிலை.

காணப்படுகின்ற இத்நிலவுலகத்திற்கு மூலமான சூக்கும

காரணங்களை ஆராய்ந்து தெளிந்தவன் அதன்தோற்றத்தைக் கண்டு மயங்காமல் தத்துவ ஞானியாய் விளங்குவான் என்பார் உலகு வகைதெரிவான் கண்ணதே என்றார்.

சுவைமுதலிய ஐம்புலன்களின் கூறுபாடுகளை ஐயமறத் தெளிந்துள்ளவன்கண்ணேயே இவ்வையம் உள்ளதென்பதாம்.

இவ்வுலகம் ஐவகைப் பூதங்களின் காரியம் என்பதும், இதனைத்தெரிதலே மெய்யுணர்வு என்பதும், இவ் வுணர்வுடையவன் அதன் தோற்றத்தில் மயங்கான் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை சுகமுனிவர்பால் உணரப்படும்.

## கதை.

சுகர் என்பவர் வியாசருடைய பிள்ளை. பிறந்தபொழுதே துறந்து சென்றவர். உலகியலையும் உணர்வியலையும் நன்கு தெரிந்தவர். சுகம் என்பது கிளி யென்னும் ஒரு பறவைக்குப் பெயர். அதன் முகம்போன்ற முகத்தை யிவர் பெற்றிருந்தமையால் சுகன் என்னும் பெயரை இவர் பெற்றார். இவர் தந்தையினும் சிறந்த தத்துவ உணர்வினர். உலகப்பற்றை முற்றத்துறந்து விரைந்துசென்றார். தந்தை மகவாசையால் பின்தொடர்ந்தார். அழைத்தார். அப்பொழுது எல்லாப் பொருள்களும் என்னே என்னே என்று எதிர்மொழி தந்தன. சுவைமுதலிய ஐந்தின் வகைதெரிவான் கண்ணதே உலகம் என்பது இவர்பால் அன்று உணர்நின்றது. இதனை இதன் அடியில் வருவதால் காண்க.

பிறந்த பொழுதே துறந்து பிறைக்குழவி போல்நடப்பப்
　　பின்போய்த் தொன்னூல்
அறைந்தபுகழ் வியாதமுனி யாதரத்தால் மதலாவென்
　　றழைப்பச் செவ்வாய்
திறந்துநறை பொழியுமலர்ச் செழுந்தருவும் என்னென்ன
　　உயிர்கள் யாவும்
நிறைந்துறையும் சுகமுனிவ னிரையிதழ்த்தா மரைமலர்த்தாள்
　　நினைதல் செய்வாம். (பாகவதம்)

பிண்ட நிலையைப் பிழையறநன் கோர்ந்தார்பால்
அண்டநிலை நிற்கும் அமைந்து.

சுகமுனிவர் மெய்யுணர்வுடையராய்த் துறந்தார் என்பது இதனால் கூறப்பட்டது.

28. காட்டினாக் கீரன்சீர் கம்பன் பெருமையவர்
கூட்டுமொழி யென்னே குமரேசா—பாட்டில்
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். (அ)

இ—ள்.

**குமரேசா!** நக்கீரரது சீரையும் கம்பரது பெருமையையும் என் அவர்களுடைய மொழிகளே காட்டின? எனின், நிறைமொழிமாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டிவிடும் என்க.

நிறைமொழி = அறிவும் தவமும் நிரம்பியமொழி.

மறைமொழி = ஆணையிட்டுச் சொல்கின்ற மந்திரமொழி.

காட்டுதல் = பிறரறிய உணர்த்துதல்.

நிறைந்த மொழியினையுடைய துறந்தாரது பெருமையை இந் நிலவுலகில் அவர்தம் மறைமொழிகளே கண்கூடாகக் காட்டி விடும் என்பதாம்.

மாந்தர் என்னுஞ்சொல் என்றும் பன்மையாகவே நின்று மக்களைச் சுட்டும்.

பெரியாரது மொழிகள் தம்பயனை யாண்டும் தப்பாமல பயக்கும்என்பது "காட்டிவிடும்" என்னும் துணிவுரையால்காணப்படும்.

சிறந்த பெரியார்களிடத்தில் நிறைந்த மொழிகள் உளவாம் என்பதும், அம்மொழிகளே அவர்களுடையபெருமைகளை உலகறிய உணர்த்திவிடும் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை நக்கீரர் பாலும், கம்பர்பாலும் உணரப்படும்.

## கதை

நக்கீரர் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு வருடங்கட்கு முன்னர் மதுரையில் இருந்தவர். சங்கப்புலவருள் தலைவராய் நின்றவர். பொய்யில் புலவர் என்னும் புகழினை யுடையவர். பரம்பொருள் நூலுக்கு அரும்பொருள் கண்டவர். நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே யென்று கண்ணுதற் பரமன் முன்னின்று கலங்காமல் வாதித்த கல்வி வீரர். இவர் சங்கத்தில் தலைமை பெற்று விளங்கியிருந்தார். அக்காலத்தில் கொண்டான் என்னும் குயவன் ஒருவன் அங்குவந்தான். சங்கத்தை மதியாது தருக்குற்று நின்றான். வடமொழியே சிறந்ததென்று வாதித்தான்.

அவ்வளவில் அமையாமல் தமிழை யிழித்துக்கூறினான். அதனால் நக்கீரர் அவனை வெகுண்டார். மறைமொழி யொன்றை விரைவில் மொழிந்தார்.

"முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரணை கபிலரும் வாழி—அரணிலா
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்டான்
ஆனந்தஞ் சேர்கசுவா கா." என்று இங்ஙனம் சொல்லிய

உடனே அவன் துள்ளி விழுந்தான். துடித்து உயிர் துறந்தான். அதன்பின் அவன்மேல் அருளி,

"ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தால் காலக்கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையால்
செந்தமிழே தீர்க்கசுவா கா."

என்றொரு கவியை நன்றுமொழிந்தார். விழுந்து மடிந்த கொண்டான் எழுந்து மகிழ்ந்து நின்றான். இம்மொழி இவர் பெருமையை அன்று நன்று காட்டி நின்றது.

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப.

என்னும் தொல்காப்பியச் சூத்திர உரையில் இது தெளியப்படும்.

### கதை 2.

கம்பர் என்பார் இற்றைக்கு ஆயிரவருடங்கட்கு முன்னர்ச் சோழநாட்டிலே திருவழுந்தூரிலே அவதரித்தார். இவரது குலத்தைப்பற்றிப் புலவர் பலர் பலவாறு கூறுகின்றனர். இவரை அந்தணர் என்பார் பலர்; வேறுசிலர் அரசர் என்பார்; இன்னுஞ் சிலர் வேளாளர் என்பார்; பின்னுஞ் சிலர் உவச்சர் என்பார். "கன்னன் பிறப்பும் பின்னுளிற் றுலங்கிற்று கம்பன் பிறப்பு இன்னம் அறிந்தார்கள் இலையில்லை முக்காலும் இது மெய்ம்மையே" என்றார் மற்றொரு பெரியவர். இவர் குலம் எதுவாயினும் இவரது தோற்றம் தெய்வத் தன்மை வாய்ந்த தென்பது தேற்றம். இராமாயணம் என்னும் காவிய அமுதத்தை மன்பதைகள் என்றும் அநுபவித்து இன்புறும் வண்ணம் அருளுடன் தந்த திருவினையுடையவர். புவியரசர்களும் கவியரசர்களும் போற்றி வணங்கத் தக்க சீர்த்தி வாய்ந்தவர். கல்வியிற் பெரியவர். கவிச்சக்கிரவர்த்தி யென்னும் அரும் பெயர் பெற்றவர். பிள்ளைப் பருவத்திலேயே கலைமகள் கருணையை இவர் கலு

றப் பெற்ருர். அதனால் நிறைமொழி யுடையாராய் நிலத்தில் விளங்கினார். அக்காலத்தில் காளிங்கராயன் என்னும் குறுநில மன்னனது குதிரை ஒன்று இவரது குருவின் விளைநிலத்தில் மேய்ந்து கொண்டு நின்றது. அதனை இவர் ஓட்டினார்; அஃது ஓடவில்லை. வெகுண்டார்

> "வாய்த்த வயிரபுர மாகாளி அம்மேகேள்
> காய்த்த தினைப்புனத்தில் கால்வைத்துச்—சாய்த்துக்
> கதிரை மாளத்தின்ற காளிங்க ராயன்
> குதிரை மாளக்கொண்டு போ."

என்று வசைகவியொன்றை இசையுடன் மொழிந்தார். உடனே அக்குதிரை மாண்டு விழுந்தது. கண்டார் அதனை. கொண்டார் கருணை. கூறிய வெண்பாவின் ஈற்றடியை மாற்றி "குதிரை மீளக்கொண்டு வா" என்றார். மாண்ட குதிரை மீண்டெழுந்தது. மேற்குறித்தபெரியார் இருவரும் நிறைமொழி மாந்தர் என்பதை அவர்தம் மறைமொழிகளாலே உலகம் நன்குணர்ந்தது.

> **துறந்தார் சினந்தொருசொற் சொற்றக்கால் யாரே**
> **இறந்துபடார் நிற்ப ரெதிர்ந்து.**

பெரியார்பெருமை அவர் மொழியால் அறியலாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

29. வென்றிக் கபிலர் வெகுளியால் ஏன்சகரர்
குன்றி மடிந்தார் குமரேசா—என்றும்
குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது. (௯)

இ—ள்.

**குமரேசா!** கபில முனிவர் வெகுளியால் சகரர் எல்லாரும் ஏன் உடனே இறந்தார்? எனின், குணம் என்னும் குன்று ஏறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தல் அரிது என்க.

சகரர் என்றது சகரன் என்னும் அரசன்புதல்வர் அறுபதினாயிரவரை. கணம் = மிகச்சிறியதோர் கால அளவை. அருமையும் திண்மையும் பெருமையும் கருதிக் குணத்தைக் குன்று என்று உருவகித்தார்.

மேல், நீத்தாரது மொழியால் அழிவும் ஆக்கமும் உளவாம் என்றார்; இதில், அவர் எண்ணினாலும் பார்த்தாலும் அவை நிகழும் என்கின்றார்.

குணங்களாகிய மலைமேல்நின்ற முனிவரது வெகுளியை யாவராலும் சிறிதும் பொறுக்கமுடியாதென்பதாம்.

வாய்மை, தூய்மை, அருள், தவம், மெய்யுணர்வு முதலிய குணநலங்களையுடையாரே பெரியர் என்பதும், அவர்பால் வெகுளி தோன்றாதுஎன்பதும், ஏதாவது ஓர்ஏதுவால் தோன்றினும் தோன்றியஅப்பொழுதே அவ்வெகுளி அழியும் என்பதும், அத்துணைப் பொழுதினும் அதனைத்தடுத்தற்கு எவர்க்கும் முடியாதென்பதும், 'கணமேயும் காத்தல் அரிது" என்பதனால் உணரப்படும்.

குணமிலார் வெகுளியினும் அதனையுடையாரது வெகுளிக்கே அஞ்சவேண்டும் என்பது குறிப்பு. இல்லார்வெகுளி யாதும்செய்யாது; உடையார் வெகுளி எல்லாம்செய்யும் என்பதாம்.

அருந்தவர் சினந்தால் எவரும் எரிந்தொழிவர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை கபிலர்பால் உணரப்படும்.

## கதை.

கபிலர் என்பவர் அருந்தவமிகுந்த ஓர்சிறந்த முனிவரர். உயரிய குணங்களெல்லாம் ஒருங்கேயுடையவர். பாதலத்தில் அமர்ந்து நெடுங்காலம் கடுந்தவம் புரிந்தார். அக்காலத்தில் அயோத்தியில் சகரன்என்னும் ஓர்அரசனிருந்தான். அம்மன்னனுக்குத் தெய்வத்திருவருளால் அறுபதினாயிரம் புதல்வர் தோன்றினர். அதன்பின் பரிவேள்வி ஒன்று செய்யக்கருதி அதற்கு உரியமுறைப்படி ஓர் அசுவத்தை உலகை வலம்வரும்படி விட்டான். அவன் புதல்வராகிய அறுபதினாயிரவரும் அதனைத் தொடர்ந்து பின்சென்றார். அவ்வேள்விக்கு இடையூறுசெய்ய எண்ணியிருந்த இந்திரன் அவரனைவரும் அறியாவண்ணம் அப்பரியைப்பிடித்துப் பாதலத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த இம்முனிவர் பக்கத்தில் உள்ள ஒரு மரத்தில் பிணித்துவிட்டு மறைந்து போயினன். குதிரையைக் காணமல் சகரர் பல இடங்களிலும் தேடினர். வாடினர். வருந்தினர் முடிவில் கண்மூடி அருந்தவம் புரியும் கபிலர்பக்கல் வந்து

அதீனக்கண்டார். இம்முனிவரே தம்குதிரையை மறைத்துவைத் துள்ளாரென்று மாறுபடமதித்தார். அனைவரும் சீறினர். ஆராயா மல் இவரை வைதார். முனிவர் வெகுண்டு விழித்தார். இவரது வெகுளித்தீயால் சகரர் அனைவரும் உடனே சாம்பராயினர்.

> "மூளும்வெஞ்சினத் தருந்தவன் முனிந்தெரி விழிப்பப்
> பூளைசூடிதன் நகையினில் எயில்பொடித் தனபோல்
> ஆளுமைந்தர் அறயுதரும் சாம்பராய் அவிந்தார்
> வேள்விகொண்டநல் வேந்தனுக் குரைத்தனர் வேய்கள்."

அயுதம் = பதினாயிரம். வேய்கள் = ஒற்றர்கள். (இராமாயணம்.)

இங்ஙனம் அவர் மாண்டொழிந்த பின் மீண்டும் பழமைபோல் இவர் யோகநிலையில் மேவியிருந்தார். இவரது வெகுளியின்வேகத் தையுணர்ந்துதற்குக் கவி இதில்இணைத்திருக்கும் உவமையை யூன் றியுணர்க. இதனால் இவர் முதல்வனோடு ஒப்ப வைத்தெண்ணும் நிலைமையுடையார் என்பது புலனும்.

பெருவீரராகிய அறுபதினாயிர அரசகுமாரரையும் தமதுபார் வையால் ஒருகணத்துள் ஒருங்கே அழித்தமையால் வென்றி என் னும் பதம் இவர்க்கு அடையாய்நின்றது. "குணமென்னும் குன் றேறிநின்றார் வெகுளிகணமேயும் காத்தல் அரிது" என்பதை உலகம் காண இவர்உணர்த்திநின்றார். (விரிவைஇராமாயணத்தில்காண்க.)

> மாதவர்கள் உள்ள மறுகின் உலகமெல்லாம்
> தீதடைந்து தேம்பும் திரிந்து.

சான்றோர் வெகுளியின் தன்மையும் வன்மையும் இதனால் சாற்றப்பட்டன.

30. பண்டேன் சடபரதர் பல்லுயிர்க்கும் செந்தண்மை
கொண்டு நடந்தார் குமரேசா—கொண்டாடும்
அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான். (ய)

இ—ள்.

குமரேசா! சடபரதர் எல்லாவுயிர்களிடத்தும் செவ்விய அருளை என் செய்து ஒழுகினர்? எனின், எவ்உயிர்க்கும் செந்த ண்மை பூண்டு ஒழுகலான் அந்தணர் என்போர் அறவோர் என்க.

அந்தணர் = அழகிய தண்ணளியை உடையவர். அளி = இரக்கம். செந்தண்மை = செவ்விய தண்ணளி. அஃதாவது கோடாத அருளுடைமை. பூண்டு ஒழுகல் = என்றும் விரதமாகக்கொண்டு நடத்தல்.

எல்லா வுயிர்கள்மேலும் அருளைச் செய்தொழுகும் இயல்பினராதலால் அந்தணர் என்று சொல்லப்படுவோர் அறவோரே யாவர் என்பதாம்.

தாம் எண்ணியபடியே எவரையும் அழிக்கவும், ஆக்கவும் வல்லவராயினும் எல்லாவுயிர்களிடத்தும் இயல்பாகவே அருளுடையராதலால் அறநெறிதிறம்பி அருந்தவர் யாதுபசெய்யார் என்பது கருத்து. இதனால் அவரது வரம்பிலாற்றலும் பேரருளுடைமையும் உணரலாகும். அவரருள்வழி யொழுகவேண்டும் என்பது குறிப்பு.

உயிர்களிடத்துச் செவ்விய அளியைச்செய்து ஒழுகுதலே அந்தணர்க்குக் கடமை என்பதும், அஃதில்லார்க்கு அந்தணத்தன்மை இல்லை என்பதும், அருளுடையார் எவராயினும் அவரே அந்தணர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை சடபரதர் பால் உணரப்படும்.

## கதை.

பரதன் என்பவன் இப்பரதகண்டத்தில் பெரும்புகழ் நிறுவிய ஒரு பெரிய அரசன். பிறிதின்நோய் தன்னோய்போல் கருதும் பெற்றியையுடையான். எவ்வுயிரும் தன்னுயிர்போல் எண்ணியிரங்கும் புண்ணியன். உலகியலையும் உணர்வியலையும் இவர் உள்ளபடியுணர்ந்தார். பிறவி வீடு என்னும் இருமைவகையினையும் ஒருமையில்தெளிந்தார். அரசுமுதலிய அனைத்தையுந் துறந்தார். ஞானியாய் மோனமுற்றிருந்தார். அதன்பின் அந்தணராய்த் தோன்றினார். எல்லாம் தெரிந்திருந்தும் யாதும் தெரியாதவரைப்போல் நடித்தமையால் இவர் ஜடபரதர் எனப்பட்டார். தாம்நடந்துசெல்லும் வழியில் எறும்பு முதலிய சிறுபிராணிகள் வருந்துமே யென்று குந்திநடந்தார். அளி நிறைந்த நெஞ்சும் ஒளிநிறைந்த மேனியும் உடையராயிருந்தார். பெரியார் எவரும் இவரது செந்தண்மையை மதித்துத் துதித்தார். அந்தணர் இவரென அனைவரும் போற்றினார். எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவோரே அந்தணராவரென்பதை உலகம் காண இவர் உணர்த்தி

நின்றார். இதன்விரிவை விண்டுபுராணத்தில் கண்டுதெளிக.

அருளொழுக்கம் பூண்ட அவரே உயர்ந்து
தெருளுடைய ராவர் சிறந்து.

செந்தண்மையே அந்தணர் தன்மை யென்பது இதனால் கூறப்பட்டது.

(இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.)

ஒழுக்கத்தின்கண்ணே வழுவாமல் நிற்றல். பற்றுக்களைவிடுத்தல். பிறப்பு வீடுகளின் பெற்றியைத் தெளிதல். ஐம்பொறி அடக்கல். அவாவினை அறுத்தல். செயற்கரிய செய்தல். உலகியல்லோர்தல். நிறைமொழிகொள்ளல். குணங்களால் விளங்குதல். செந்தண்மை பூணல் என்பனவாம. இவை, முற்றத்துறந்த முனிவருக்குரிய குணங்களாக முறையே இதில் உணர்த்தப்பட்டன.

# 4-ம் அதிகாரம் அறன்வலியுறுத்தல்.

அஃதாவது அறத்தினது சிறப்பினை யுணர்த்துதல். இருமை வகைதெரிந்து அறநெறி நின்று துறந்தார்பெருமையை முன்னர்க் கூறினார்; இதில் அவ் அறத்தின் பெருமையை உணர்த்துகின்றா ராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

31. பண்டுபல அல்லலுற்றும் பாண்டவர்கள் ஏனறத்தைக்
கொண்டார் துணையாக் குமரேசா—மண்டு
சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்ினூஉங்
காக்கம் எவனோ உயிர்க்கு. (க)

இ—ள்.

குமரேசா! பாண்டவர்கள் அல்லல்பல அடைந்தும் அறத்தை ஏன் உறுதியாகப்பற்றி நின்றார்? எனின், அறம் சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் அறத்தின் ஊங்கு உயிர்க்கு ஆக்கம் எவனோ? என்க. எவன்என்னும் வினா இன்மைகுறித்து நின்றது.

சிறப்பையும் செல்வத்தையும் பயக்குமாதலால் அறத்தினும் சிறந்த ஆக்கம் உயிர்க்கு வேறு இல்லை என்பதாம்.

சிறப்பு = முத்தி. உயிர்கள்பெறத்தக்க எல்லாப்பேற்றினும் பெருஞ் சிறப்புடையது முத்தியே ஆதலால் சிறப்பு என்றதற்கு ஈண்டு இப்பொருள் கொள்ளப்பட்டது. ஊங்கு, மிகுதியென்னும் பொருளை விளக்குவதோர் சொல்.

உயிர்க்கு அறத்தின்ஊங்கு ஆக்கம் எவன்—உயிர்கட்கு அறத்தினும் மிக்கஆக்கம்யாது? வேறொன்றும்இல்லையென்பதுகுறிப்பு.

ஆக்கம், ஆகிவருவது. அஃதாவது இன்பசாதனங்கள், ஒருவனுக்கு மேன்மேலும் பெருகிவருதல். சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் என்றதனால் இருமையினும் அறம் இன்பந்தரும் என்பது பெற்றாம். பொருளான் ஆக்கம் வருமெனல் போக்கி அறமே அதனைத் தருமென்றெண்ணுக என்பதாம்.

அறமே எல்லா நலங்களையும்அருளும் என்பதும், தமக்கு ஆக்கம் என்றுகருதி உயிர்கள் அவ்வறத்தையே செய்யவேண்டும் என்பதும், இதற்குச்சான்றாக ஆக்கமுதலிய அனைத்தையும்விடுத்து அறத்தைமட்டும் விடாமல் பாண்டவர்கள் உறுதியாகப்பற்றி நின்றார் என்பதும், அதன்பயனாக அவர்கள் சிறப்பையும் செல்வத்தையும் அடைந்தார்கள் என்பதும் இதில் உணரப்படும்.

## கதை.

பாண்டவர் பாண்டு என்னும் அரசன் புதல்வர். அவராவார் தருமன், வீமன், விசயன், நகுலன், சகாதேவன் என ஐவர். இற்றைக்கு 5000-வருடங்களுக்கு முன்னரே அத்தினபுரியில்இருந்தார். இப்பொழுது டில்லியென்று வழங்கப்படுகிற இடமே பண்டு அப்புரி இருந்த இடமாம். சந்திரகுலத்தில் தோன்றிய அத்தியென்னும் அரசனை முதன் முதல் அதனை வனப்புற ஆக்கினான். அதனால் இப்புரிக்கு அப்பெயரிடப்பட்டது. அதிலிருந்து தருமன் முதலிய ஐவரும் பெருமையோடு வாழ்ந்து வந்தனர். அக்காலத்தில் இவரது பெரிய தந்தையாரின் புதல்வராகிய துரியோதனன் முதலியோர் பொறாமையால் இவருக்குப் பெருந்துயர் விளைத்தனர். அவர்செய்த சூழ்ச்சியால் இவர் அரசபதவியையும் இழந்தார். ஆக்கமுந்துறந்தார். அடவியிற் புகுந்தார். அருந்துயர் அடைந்தார். ஆயினும் அறமே ஆக்கம் என்று அறிவுடனிருந்தார். அறவோர் இவரென அனைவரும் புகழ்ந்தார். இவ்வுரிமையும் உண்மையும்

தருமன் என்னும்பெயரானே நன்கு விளங்கும். சிறப்பும் செல்வமும் இவர்கள் அறத்தால் பெற்றனர். உயிர்க்கு அறத்தினூங்கு ஆக்கம் இல்லையென்பதை உலகம் காண இவர் உணர்த்திநின்றார். விரிவைப் பாரதத்தில் காண்க.

தருமமேயினை யில்பொருள்; தரையிடத் தகைசால்
ஒருமையின்பினே யுதவியின் னுலகினும் உடன்போய்
அருமையின்பமுய்த் தந்தகர்ச் செறுமெனில் அறமே
இருமையுந்துணை யாகுவ தன்றி மற்றில்லை.
(திருக்கூவப்புராணம்.

தருமமே உலகம்போற்றச் சகலகா ரணமதாகும்
தருமமே யழியாதென்றும் தாபர மாகிநிற்கும்
தருமமே தன்னைவேட்டோர்க்குச் சவுக்கியம்அனைத்தும்நல்கும்
தருமமே முத்திசேரும் சாதனம் என்றுட்கொள்வான்.
(காசிரகசியம்.)

ஈட்டிய ஒண்பொருளும் இல்லொழியும் சுற்றத்தார்
காட்டுவாய் நேரே கலுழ்ந்தொழிவர்—மூட்டும்
எரியின் உடம்பழியும் ஈர்ங்குன்ற நாட
தெரியின் அறமே துணை. (அறநெறிச்சாரம்.)

எண்ணியசீ ரெல்லாம் இனிதுதவும் நல்லறம்போல்
நண்ணியநற் கேளார் நமக்கு.

அறமே உயிர்கட்குச் சிறந்த உறுதிப் பொருள் என்பது இதனால் கூறப்பட்டது.

---

32. வீடணனுர் ஆக்கமுற வேலிலங்கை மன்னவனேன்
கூடினன் கேடு குமரேசா—கேடில்
அறத்தினூஉங் காக்கமும் இல்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு. (உ)

இ—ள்.

**குமரேசா!** வீடணன் ஆக்கம்பெற இராவணன் என் கேட்டை அடைந்தான்? எனின், உயிர்கட்கு அறஞ்செய்தலினும் மிகுந்த ஆக்கமுடை இல்லை; அவ்வறத்தை மறந்து விடுதலினும் மிக்க கேடும் இல்லை என்க.

அறஞ்செய்தவன் சிறப்பையும், செல்வத்தையும் அடைவான் என்று மேலே கூறினர்; இதில் அதனைச் செய்யாமல் மறந்தவன் கெடுவான் என்கின்றார்.

ஆக்கத்தை விழைதலும் கேட்டை வெறுத்தலும் உயிர்களது இயல்பு, ஆதலால் விரும்பியவற்றை விரும்பியவண்ணமே ஒருவன் பெறவேண்டுமாயின் அவன் அறஞ்செய்யவேண்டும் என்பதாம்.

கேட்டை அடைதற்கு ஒருவன் யாதும் செய்யவேண்டாம் அறம் செய்யாமையே அமையும் என்றபடி.

அறம் செய்தவன் ஆக்கம் பெறுவான், அதனைமறந்தவன் கேட்டை அடைவான் என்னும் உண்மை வீடணன்பாலும் இராவணனிடமும் முறையே காணப்படும்.

## கதை.

இராவணன் புலத்திய முனிவரது புதல்வராகிய விச்சிரவசுவுக்கும் கேகசிக்கும் பிறந்தவன். அரக்கர் குலதிலகன். சிறந்த வரபலங்களை யுடையவன். இலங்கையிலிருந்து அரசு புரிந்தான். நல்லபோர்வீரன். தேவர்முதலியஅனைவரையும் செருவில்வென்று திக்கு விசயம் செய்தான். மூன்று உலகங்கட்கும் தானே முதல்வனாய் நின்றான். அதனால் திரிலோகாதிபதியெனச் சிறந்து விளங்கினான். இத்துணை நலங்களை யெய்தியிருந்தும் இவன் அறத்தை மறந்தான். மறத்தையே புரிந்தான். அதனால் பெருங்கேடுற்றான்.

> "கறங்குகால்புகா; கதிரவன் ஒளிபுகா; மறலி
> மறம்புகாது; இனிவானவர் புகாரென்கை வப்பே
> திறம்புகாலத்துள் யாவையும் சிதைபினும் சிதையா
> அறமபுகாதிந்த அணிமதிற் கிடக்கைநின் றகத்தின்"

இஃது இராவணனது இராஜதானியாகிய இலங்கையைப்பார்த்தபொழுது அனுமான் கூறினது. இதனால் இராவணன் எல்லா வலிமைகளையும் எய்திஇருந்தான் என்பதும், அவன் இருந்த ஊரினுங்கூட அறம் இல்லையென்பதும், அதனால் அழிந்தான் என்பதும் தெளியப்படும். இதன்விரிவை இராமாயணத்தில் காண்க.

## கதை 2.

வீடணன் அரக்கர் குலதிலகனாகிய இராவணன் உடன்பிறந்த தம்பி. அறமும் அறிவும் அருளும் உடையவன். அறமே எல்லா நலங்களையும் அருளுமென்று கருதி அதனை மறவாமற் செய்தான். கம்பர் அடிக்கடி இவனைத் தருமஉருவினன் என்பர். தன் தமையன் செய்கின்ற மறக்கொடுமைகளை நினைந்து வருந்தினான். அறத்தை மறந்தால் கேடுவரும் என்று அண்ணனுக்கு அறிவுறுத்தினான். அவன் கேட்கவில்லை. அதன்பின் தருமமூர்த்தியாகிய இராமமூர்த்தியைச் சார்ந்தான். ஆக்கம் அனைத்தையும் அடைந்துமகிழ்ந்தான்.

மன்னுதவத்துப் புலத்தியன்றன் மரபுவிளங்க மறைவிளங்கத்
தன்னோரில்லாத் தந்தைக்குத் தக்கமகவாய்ச் சண்டாளர்
அன்னோர் முன்னோரவருதித்த அந்தவயிறு சுத்தமுற
மின்னோரிடையாள் தன்வயிற்றில் விளங்கும்புகழ் வீடணன்பிறந்தான்.

பொய்யுங்களவும் பாதகமும்பொல்லா வொழுக்கும் அலைகடிந்து
மெய்யுந்தயாவும் தருமமுடன் விளங்கும் பொறையும் இவைபூண்டு
செய்யும் செயல்களவையெல்லாம் சிட்டர்செய்யும் செயலாகி
அய்யன்புகழ்வீடணன் மறைகளறைந்த அறத்தின்வழிநின்றான்"
(இராமாயணம்.)

இங்ஙனம் அறமுடையனாய் நின்ற இவன் சிறந்துவாழ்ந்தான். அதனை மறந்த அவ்வண்ணன் இழிந்து வீழ்ந்தான். "அறத்தின் ஊங்கு ஆக்கமுமில்லை; அதனை மறத்தலினூங்கில்லைகேடு" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

உயிர்க்கு உறுதிபயக்கத்தக்க அறத்தை ஒருபோதும் ஒருவன் மறக்கலாகாது என்பது கருத்து.

திருவு மின்புஞ் சிறப்பும் புகழுமற்
றொருவ ராக்கலும் நீக்கலு முள்ளவோ
மருவும் புண்ணிய மாந்தர்க் கவையெலாம்
தரும மின்றெனில் தாமே சிதையுமால். (சேதுபுராணம்)

ஓர்ந்தறத்தைக் கொண்டா ருயர்ந்தார் அதைமறந்தார்
கூர்ந்திழிந்து வீழ்ந்தார் குடி.

அறம்செய்யாதவன் கெடுவான் என்பது இதனால்கூறப்பட்டது.

33 தண்டாமல் செய்தார்ஏன் தண்டி யடிகளன்று
கொண்ட வினையைக் குமரேசா—கண்டென்றும்
ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும்வாய் எல்லாஞ் செயல். (ங)

இ—ள்.

குமரேசா! தண்டியடிகள் தாம்கொண்ட அறவினையை யேன் இடைவிடாமற் செய்தார்? எனின், அறவினையை ஒல்லும் வகையால் செல்லும்வாயெல்லாம் ஓவாதே செயல் என்க.

ஓவுதல் = ஒழிதல். ஓவாதே = இடைவிடாமலே. ஒல்லும் வகையால் = தமக்குஇயன்றவகையில். செல்லும்வாயெல்லாம்செயல் = செய்யமுடியுமான இடங்களிலெல்லாம் செய்க.

தம்மாலியன்றவரையும் அமயம் வாய்த்தபோதெல்லாம் ஒவ்வொருவரும் அறஞ்செய்யவேண்டும் என்பதாம்.

அறமாகிய நல்வினையை ஒருவன் தனது தகுதிக்கேற்பச்செய்யலாம் என்பதும், இடம்பொருள் ஏவல்கள் இல்லாதவனும் மனம் மொழி மெய்களால் அதனைச்செய்யலாம் என்பதும், அங்ஙனம் செய்யுங்கால் அதனை யிடையே விடலாகாது என்பதும், இதற்குச் சான்றாகத் தண்டியடிகள் அறவினையை ஒல்லும் வகையால் ஓவாதேசெய்தார் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன.

கதை.

தண்டியடிகள் என்பவர் அறுபான்மும்மை நாயன்மார்களில் ஒருவர். இவர் சோழநாட்டிலே திருவாரூரிலே யிருந்தார் பிறவியிலேயே குருடர். பொருள்வளங் குறைந்தவர். ஆயினும் அருள்வளம் மிகுந்தவர். அறவினையை நாளும் மறவாமற்செய்தார். திருவாரூர்ச் சிவாலயத்தின் மேற்றிசையில் ஒரு சிறு குளம் இருந்தது. அது சேறும் மணலும் நிறைந்து தூர்ந்திருந்தது. அக்குளத்தைஇவர் நன்கு பண்படுத்தினர். இந் நல்வினையை யிவர் செய்து வரும்பொழுது குளத்துள்ஒருதறியும் கரைமேல் ஒன்றும் நட்டினர். அவ்விரண்டற்கும் தொடர்பாக நீண்ட கயிறொன்று கட்டினர். அக்கயிற்றைத் தடவிக்கொண்டே சென்று மண்ணைக் கூடையில் எடுத்து வெளியே கொண்டு கொட்டினர். ஒல்லும்வகையால் ஓவாதேயிதனைச் செய்துவருங்காலத்தில் சமணர்பலர் இவருக்கு இடை

பூறுகள் பலசெய்தனர். எவர் எதைச் செய்தாலும் தடையின்றி யிவர் தமது அறவினையை யிடைவிடாமல் செய்துவந்தார். அத ளுல் இவர் குருடுநீங்கினர். பெரும்புகழுற்ருர். பேரின்பம்பெற் ருர். செல்லும்வாயெல்லாம் அறத்தை ஓவாது செய்துவந்தாராத லால் இவர் சிறந்துநின்ருர். விரிவைப் பெரியபுராணத்தில்காண்க.

ஆனபோ தெல்லாம் அறஞ்சேய்க அஃதுனக்குத்
தானினைந்த வெல்லாந் தரும்.

அறம்செய்யும் திறம் இதனல் அறிவிக்கப்பட்டது.

34. வேடமின்றிப் பூசையின்றி மெய்யறத்தைச் சாக்கியனர்
கூடினர் என்னே குமரேசா—ஓடும்
மனத்துக்கண் மாசில னதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. (௪)

இ—ள்.

குமரேசா! சாக்கியநாயனர் வேடமும் பூசையும் இல்லா மலே அறத்தின்பயனை யேன்அடைந்தார்? எனின், ஒருவன் தனது மனத்துக்கண் மாசுஇலன் ஆதலே அறம்; பிற ஆகுல நீர என்க.

மாசு = குற்றம். ஆகுல நீர = ஆரவார நீர்மையன. அவை யாவன பிறர் அறியவேண்டிச் செய்கின்ற ஆடம்பரங்கள்.

மனத்தில் குற்றமிலனயிருத்தலே ஒருவனுக்கு அறமாம்; பிற வெல்லாம் வெறும் வேடங்களேயாம் என்பதாம்.

மொழியும், மெய்யும், மனத்தின்வழிப்பட்டன. இதன் நிலை மைக்குத்தக்கபடியே அவை நிலைத்துநிற்கும். ஆதலால் ஒருவன் மனம் மாசுஇலதாயிருந்தால் அவன் மொழியினும் மெய்யினும் மாசிலனும் என்க.

தீயவினைகளைச் சிந்தித்தல் மனத்தின்குற்றம். பொய்முதலிய வற்றைப் பேசுதல் மொழியின்குற்றம். இரத்தல் முதலியவற்றைச் செய்தல் மெய்யின்குற்றம். முக்கரணங்களினும் இக்குற்றங்கள் இல்லாமற்செய்தலே அறம் என்பது கருத்து. மேல் செல்லும் இடமெல்லாம் அறம் செய்க என்ருர்; இதில் அதனைச் செய்தற்குச் சிறந்த இடம் இஃது என்று சுட்டினர்.

மாசு இல்லாத மனமுடைமையே ஒருவனுக்கு அறமாம் என்பதும், மனக்குற்றமுள்ளவன் எனைத்தறங்கள் செய்யினும் அதனால் பயனில்லை என்பதும், இதற்குச் சான்றாகச் சாக்கியனார் மனநலம் ஒன்றனே அறநலங்கள் எல்லாம் அடைந்தார் என்பதும் இதில் உணர்த்தப் பட்டன.

கதை.

சாக்கியநாயனார் என்பவர் தொண்டைமண்டலத்திலே சங்கமங்கைஎன்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே பிறந்தார். கருவி நூல்களையும் அறிவு நூல்களையும் கசடறக்கற்றார். அக்காலத்தில் எங்கும் பரவியிருந்த புத்தமதத்தில் புகுந்தார். அதன் உண்மைகளை ஓதி யுணர்ந்தார். அதன்பின் சிவத்தைப்பேணுதலே தவத்திற்கு அழகு என்று நன்கு தெளிந்தார். ஆயினும் தாம் முன்னிருந்தபடியே யிருந்தார். வேறு எவ்வித வெளிவேடங்களும் கொள்ளவில்லை. மனத்தில்மட்டும் மாசு இலராயினார். அந்தரங்கத்தில் அரனை வழிபட்டு வந்தார். அறப்பயன் அனைத்தும் சிறப்புடன் பெற்றார். மாசறுமனத்தால் இவர் ஈசனருள் எய்தினார். எங்கும் புகழுற இன்புற்றிருந்தார். மனத்துக்கண் மாசு இல்லாதவரே அறத்தின்பயனை அடைவர் என்பதை உலகம்காண இவர்உணர்த்தி நின்றார். விரிவைப் பெரியபுராணத்தில் காண்க.

மனத்தின்கண் மாசுஇல்லாதவன் செய்யும் அறமே சிறந்த பயனை விளைவிக்கும் என்பது கருத்து.

கற்றதங் கல்வியும் கடவுட் பூசையும்
நற்றவம் இயற்றலும் நவையில் தானமும்
மற்றுள அறங்களும் மனத்தின் பாலழுக்
கற்றவர்க் கேபயன் அளிக்கும் என்பரால். (காசிகாண்டம்)

என்னேமற் றிவ்வுடம்பு பெற்றும் அறநினையார்
கொன்னே கழிப்பர்தம் வாழ்நாளை—அன்னோ
அளவிறந்த காதற்றம் ஆருயி ரன்னார்க்
கொளவிழைக் குங் கூற்றமுங் கண்டு. (நாலடியார்.)

உள்ளம் புனித முறலே உயரறமாம்
கள்ளமே மற்றவெலாங் காண்.

அறத்தின் இயல்பு இதனால் அறிவிக்கப்பட்டது.

35. வெற்றி மிகுதக்கன் வேள்வியறம் செய்துமேன்
குற்றமிக வுற்றான் குமரேசா—உற்ற
அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம். (ரு)

இ—ள்.

குமரேசா! தக்கன் வேள்வியாகிய அறத்தைச் செய்தும் என் குற்றம் உற்றான்? எனின், அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம் என்க.

இழுக்கா இயன்றது = நீக்கிநடந்தது. செய்யா என்னும் வாய்பாட்டைச் செய்தென்னும் வாய்பாடாகத்திரித்துப் பொருள் கொள்ளப்பட்டது.

அழுக்காறு = பிறருடைய நலங்களைக்கண்டு பொறாமல் மனம் புழுங்குதல். மற்றெவற்றினும் இது மிக்க இழிகுணமாதலால் இதனை முன்வைத்தார்.

பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் என்னும் இந்நான்கும் இன்றி நடப்பதே அறமாம் என்பதாம்.

அழுக்காறு முதலிய மூன்றும் மனக்குற்றமாகவும், இன்னாச்சொல் மொழிக்குற்றமாகவும் கொள்ளப்படும்.

மனம் மொழி மெய் என்னும் மூன்றுகரணங்களானும் அறம் செய்யப்படும் என்பதும், அவற்றான் அதனைச் செய்யுங்கால் மேற்குறித்த நான்கும் விரவாமல் இருக்கவேண்டும் என்பதும், அவற்றுள் ஒன்றுகலந்தாலும் அறம் நன்றாகாதென்பதும், இதற்குச் சான்றாகத் தக்கன் வேள்வியறம் செய்தும் பொறாமையும் வெகுளியும் பொருந்தியிருந்ததினால் அது பொன்றியதென்பதும் இதில் உணர்த்தப்பட்டன.

## கதை.

தக்கன் என்பவன் பிரமாவின் மானசபுத்திரருள் ஒருவன். சிறுவிதியென்று ஒரு மறுபெயருடையவன். உமாதேவியார் தனக்குப் புத்திரியாக வந்து தோன்றும்படி அருந்தவஞ்செய்தான் அம்மையும் அவ்வாறே வந்து அவதரித்தார். உலகமாதாவைத் தனது மகளாகப் பெற்றமையை நினைந்து இவன் பெருமகிழ்வடைந்தான். தாக்ஷாயணியென்று அம்மைக்குத் தன் சம்பந்தமாக

வோர் தனிப்பெயரிட்டான். போற்றி வளர்த்தான். பருவமுற்ற பின் பரமனுக்குத் திருமணஞ்செய்து உதவினன். அதன்பின் சிவ பெருமானைத் தனது மருமகனாகக் கருதினன். இக் கருத்தால் பெருமான்பெருமையை இவன் அறவே மறந்தான். செருக்குடன் ஒருநாள் கைலைக்குச்சென்றான். அங்குள்ள சிவகணங்கள் இவனை அவமதித்தன. அதனால் இவன் வெருண்டான். விரைந்து மீண் டான். பொறாமைகொண்டான். பரமனையிகழும் நோக்கத்தோடு வெகுளியால் இவன் ஒரு பெருவேள்வி செய்தான். இந்த உண் மையை யிறைவன் அறிந்து வீரபத்திரரை யேவினார். அவர் இவன் வேள்வியைச் சிதைத்தார். வெகுளியும் பொறாமையும் விரவிச்செய்ததால் இவனது அறஞ்சிதைந்தது. விரிவைக் கந்தபுரா ணத்தில் காண்க.

கோட்ட முறுநெஞ்சன் கோடியறஞ் செய்தாலும்
காட்டில் எரித்தநிலாக் காண்.

அழுக்காறு முதலிய இழிகுணங்கள் சிறிதும் விரவாமல் செய்தலே அறமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

36. அன்றிளையம் என்று தறமேன் விரைந்துசெய்தான்
குன்றாத் துருவன் குமரேசா—இன்றிருந்து
அன்றறிவாம் என்னு தறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. (௬)

இ—ள்.

குமரேசா! துருவன் தன்னை இளையவன் என்று எண்ணா மல் அன்றேன் அறத்தை விரைந்துசெய்தான்? எனின், அன்று அறிவாம் என்னாது அறஞ்செய்க; அஃது ஒருவன் பொன்றுங்கால் அவனுக்குப் பொன்றாத் துணையாய் நின்று உதவும் என்க.

பொன்றுதல் = அழிதல். பொன்றாத்துணை = அழியாததுணை. நிலையான உண்மைத்துணை என்றபடி. அறமானது தன்னைச்செய்த உடம்பு அழியினும் தான் அழியாமல் நின்று அவ்வுயிர் புக்குழிப் புகுந்து தன்பயனை அதற்கு என்றும் இனிது உதவும் ஆதலால் அதனைப்பொன்றாத்துணை யென்றார்.

பின்புசெய்வோம் என்னாது அறத்தை முன்னதாக விரைந்து செய்க; அழியுங்காலத்து அழியாத் துணையாய் அஃது அமைந்து நிற்கும் என்பதாம்.

இத்தகைய துணையை ஒருவன் விரைந்து செய்துகொள்ள வேண்டும் என்பது கருத்து. நேற்றிருந்தார் இன்று வெந்துநீருனார் என்றபடி நிலையாமையே மிகுந்துள்ள இவ்வுலகத்தில் ஒருவன் நிலைத்துள்ளபொழுதே நிலையான துணையைத் தேடிக்கொள்வானாகில் அவன் அழிவில் இன்பத்தை யடைந்தவனாவான் என்பதாம். அன்று என்றது மாற்றாந்தாய் துருவனையிகழ்ந்த அக்காலத்தை.

அறமே ஒருவனுக்கு அழிவில்லாததுணையென்பதும், அதனை இளமைப்பருவத்தே விரைந்து செய்யவேண்டும் என்பதும், இதற்குச்சான்றாகத் துருவன் இளம்பருவத்தே யறம்புரிந்தான் என்பதும், அதனால் அவன் பொன்றாஇன்பம் பொருந்தினான் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன.

## கதை.

உத்தானபாதன் என்னும்அரசன்ஒருவன் பண்டு இப்பரதகண்டத்தின் வடபாலிருந்து அரசு புரிந்துவந்தான். இவனுக்குச் சுநீதி சுருசி என்று இரண்டுமனைவிகள் உண்டு. இவ்விருவருள் சுநீதிபால் ஒரு புதல்வன் தோன்றினான். அவனுக்குத் துருவன் என்று பெயரிட்டார். அருமையாக வளர்த்தார். ஒருநாள் இப்பாலன் தந்தையின்மடிமேல் தங்கச் சார்ந்தான். இவன் சிறியதாயாராகிய சுருசி சகியாதவளாய் இவனை வைதாள். இவனும் நாணிவருந்தித் தாயிடம் சென்றான். தாயுந்தெரிந்து தனதுளந்தளர்ந்தாள். மகன் தாயைத்தேற்றினான். அறமே துணையென்று அருங்கானடைந்தான் நாரதர் அருளால் நற்றவஞ் செய்தான். அதனால் இவன் இளம்பருவத்திலேயே யிறைவன் அருளை யெய்தி யறங்கள்பல புரிந்து பெரும்புகழ்பெற்றான். அழிவில்வாழ்வை யுற்றான். இதன்விரிவு பாகவதம் காசிகாண்டம் முதலிய பல நூல்களிலும் காணப்படும்.

வேளையுள்ள போழ்தே விரைந்தறஞ்செய் துய்கபின்
நாளையெனல் பீழையா நாடு

அறமே ஒருவனுக்கு அழியாத் துணையென்பது இதனால் அறிவிக்கப் பட்டது.

37. உற்ற மணிச்சிவிகை யூர்ந்தாரேன் மூர்த்தியார்
கொற்றவனேன் தாழ்ந்தான் குமரேசா—பற்றும்
அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை. (எ)

இ—ள்.

**குமரேசா!** அறம்புரிந்த மூர்த்திநாயனார் சிவிகையூர்ந்தார்; அதனைத்துறந்த ஓர் அரசன் ஏன் தாழ்ந்தான்? எனின், அறத்து ஆறு இது எனல் வேண்டா; சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடைக் காணப்படும் என்க.

ஆறு = பயன். சிவிகை = பல்லக்கு. பொறுத்தல் = சுமத்தல். ஊர்தல் = செலுத்தல். காணப்படும் என்பது வருவிக்கப்பட்டது.

அறத்தின்பயனை நாம் சுருதிகொண்டு அறியவேண்டா; காட்சியானே காணலாம் என்பதாம். மேல் அறம் பொன்றுந் துணையென்றார்; இதில் அது துணையாந் தன்மையைத் தெளிவித்தார்.

பல்லக்கின்மேல் அமர்ந்திருப்பவன் அறஞ்செய்தவன் என்றும், அதனைச் சுமந்து செல்பவன் அறம் செய்யாதவன் என்றும், நீவிரே கண்கூடாக அறிந்துகொள்ளலாம்; யாம் வேறு கூறவேண்டா என்று தேவர் கூறியபடி யிது.

அறத்தால் சிறந்த அரசஇன்பத்தைப்பெறலாம் என்பது கருத்து. இவ்வுண்மை மூர்த்தி நாயனார்பால் உணரப்படும்.

கதை.

அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய மூர்த்திநாயனார் என்பவர் மதுரையில் இருந்தார். சிவபெருமானுக்குத் தினந்தோறும் சந்தனக்காப்பு இட்டுவந்தார். இந்த அறத்தின்பயனால் இவர் அரசரானார். யானை இரதம் சிவிகை முதலியவற்றில் இருந்து செலுத்தினார். இன்பம்பெற்றார். இவர் செய்துவந்த அறத்துக்கு இடையூறுசெய்த கருநாடதேசத்து அரசன் தனதுஅரசபதவியை யிழந்திறந்தான். அவனது பரிசனங்கள் மூர்த்தியாருக்குச் சிவிகை தாங்கினார். சீர்கள் பல செய்தார். மூர்த்தியார் அறத்தாற்றால் சிவிகையூர்ந்தார். மறத்தால் மற்றையோர் அதனைச் சுமந்துசென்றார். இதன்விரிவு பெரிய புராணத்தில் காணப்படும். இனி, பண்டு

சிவிகை பொறுத்த சடபரதருக்கும் அதனை யூர்ந்த சவ்வீரன் என்னும் அரசனுக்கும் இடையே நிகழ்ந்த மொழிகளால் அறத்தாறு உணரப்படும்; யாம் உணர்த்தவேண்டா என்று தேவர் அவ்விருவரைச் சுட்டியதுபோலவும் இது தோன்றுமென்பாருமுளர்.

அம்மைத்தாம் செய்த அறத்தின் வருபயனை
இம்மைத்துய்த் தின்புறூ நின்றவர்—உம்மைக்கு
அறஞ்செய்யா தைம்புலனும் ஆற்றுதல் நல்லாக்
கறந்துண்டஃ தோம்பாமை யாம். (அறநெறிச்சாரம்.)

ஆண்டவனாய் நின்றறவோ னுள்வா னஃதில்லான்
பூண்டடிமை யாவன் புகுந்து.

அறத்தின்பயனைக் கண்கூடாகக் காணலாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

38. நன்றே புரிந்துவந்த நந்தனார் வாழ்நாள்போய்க்
குன்றிநின்ற தென்னே குமரேசா—என்றேனும்
வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். (அ)

இ—ள்.

குமரேசா! நாள்தோறும் அறமேசெய்துவந்த நந்தனாரது வாழ்நாள் ஏன் குன்றிநின்றது? எனின், வீழ்நாள்படாமை நன்று ஆற்றின் அஃது ஒருவன் வாழ்நாள் வழி அடைக்கும் கல் என்க.

வீழ்தல் = கழிதல். நன்று = அறம். அஃது = அச்செயல். வீழ்நாள் படாமை = கழியும்நாள் இல்லாமல். அஃதாவது அறம் செய்யாமல் கழிந்தநாள் ஒன்று இருந்தது என்று உண்டாகாதபடி என்க. ஒருவன் அறத்தைச் செய்வானாகில் அச்செயல் அவன் பிறவியைத் தீர்த்துவிடும் என்பார் "அஃது ஒருவன் வாழ்நாள் வழி அடைக்கும் கல்" என்றார்.

நன்றை இடைவிடாமல் என்றும் செய்யவேண்டும் என்பது குறிப்பு. அறமானது தன்னைச்செய்த உயிரைப் பின்பு பிறவியிற் சேரவொட்டாதபடி செய்து விடுமாதலால் அதனை உறுதியாகப் பற்றிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

வாழ் நாள் = (உயிர் உடலோடு கூடி) வாழும் நாள். பிறவி என்றபடி. இடையறாது தொடர்பாக வந்துகொண்டிருக்கிற பிறவியின் வழியை மீனிவாராமல் அடைப்பதற்கோர் தகுதியான கதவு இதுவெனத் தேவர் இதில் அருளியுள்ளமை காண்க. கல் என்றது அதன் திண்மை கருதி.

ஒருநாளும் வீணுகாமல் நாளும் ஒருவன் அறத்தைச் செய்து வருவானாகில் அவன்பிறவிதீர்ந்து பேரின்பம்அடைவான்என்பதாம்.

நல்லது நினைத்தல், நல்லது சொல்லல், நல்லது செய்யலே அறமாகும் ஆதலால் அது நன்று என நின்றது. இத்தகைய புண்ணியத்தை நாளும் ஒருவன் செய்துவந்தால் அவன் புனிதனுவன்; ஆகவே இன்னுயிர்க்கு இறைவனாய் இன்பமூர்த்தியாய், பொன்னுயிராய்ப் பிறந்து உய்ந்து போவன் என்க.

இயன்றவரையில் ஒருவன் நாள்தோறும் அறம் செய்யவேண்டும் என்பதும், அங்ஙனம் செய்வானாயின் அவன் பிறவிதீர்வான் என்பதும், இதற்குச் சான்றாக நாளும் நன்று ஆற்றிவந்த நந்தனார் பிறவிதீர்ந்தார் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன.

## கதை.

நந்தனார் என்பவர் அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவர். இவர் சோழமண்டலத்திலே, மேற்கா நாட்டிலுள்ள ஆதனூர் என்னும் ஊரிலே பறையர் குலத்திலே பிறந்தார். வெட்டிமைத்தொழில் புரிந்தார். தமது மரபுக்கேற்ற வகையால் இயன்றவரை நாளும் நல்வினையை நயந்து செய்துவந்தார். அதனால் இவர் மனந்தூயராயினார்.

"பிறந்துணர்வு தொடங்கியபின் பிறைக்கண்ணிப் பெருந்தகைபால்
சிறந்தபெருங் காதலினால் செம்மைபுரி சிந்தையராய்
மறந்தும்அயல் நினைவின்றி வருபிறப்பின் வழிவந்த
அறம்புரி கொள்கையராயே அடித்தொண்டி னெறிநின்றார்"

இங்ஙனம் நின்ற இவர், சிவாலயங்கள் தோறும் சென்று தரிசனம் செய்யவிரும்பினார். திருப்புன்கூர்என்னும்திவ்வியதலத்துக்குச்சென்றார். அங்கே ஒரு பெரியகுளத்தை வெட்டினார். ஆலயங்களுக்குரிய பேரிகை, முழவு, யாழ் முதலியவற்றிற்குத் தோல் வார் நரம்பு முதலியன உதவினார். சிதம்பர தரிசனம் செய்யச் சிந்தித்தார்.

தமது குலம் இழிந்தது என்றும், தாம் எவ்வாறு அங்கே புகமுடியும் என்றும் எண்ணி யெண்ணி வருந்தினர். ஆயினும் சிதம்பரத்துக்குச் செல்ல வேண்டும் என்னும் ஆசை யிவர்க்கு அதிகரித்தது. வேறு நாட்டமின்றிச் சிதம்பரத்தையே நாடினர். இப்பொழுதே செல்வேன் என்று துணிந்து எழுவார். நான் புலையனுயிற்றே! எவ்வாறு அங்குப் புகுவேன் என்று எண்ணியமர்வார். "நாளைப்போவேன், நாளைப்போவேன்," என்று நாள்பல கழித்தார். அதனுல் திருநாளைப்போவார் என்னும் ஒரு திருப்பெயரை இவர்பெற்ருர். காதல் அதிகரித்ததால் நல்லநாள் ஒன்றில் தில்லையை நோக்கிச் சென்ருர். சென்றவர் நகரினுட் செல்லாமல் நின்ருர். தில்லையின் எல்லையை மெல்லச் சுற்றினர். ஐயனை நினைந்து மெய்மயிர் சிலிர்த்தார். புறத்தே நின்று தொழுதார். அகத்தே நினைந்து அழுதார். அன்று இவர் உருகிநின்றபடியை எவர் உரைக்கவல்லார்? எம்பெருமானும் இவரை யாட்கொள்ள அருள்கூர்ந்தார். தில்லைவாழ் அந்தணர்கட் குணர்த்தினர். உணர்த்தினபடியே அவரனைவரும் இவரைப் புலைமகன் என்று இகழாமல் தலைமகன் என்று புகழ்ந்தார். கொணர்ந்தார். மங்கலநெருப்பைப் பொங்கமுற வளர்த்தார். விருப்புடன் நந்தனர் அந்நெருப்பில் குதித்தார். விண்ணவர்போற்றும் புண்ணிய வுருவைப்பெற்ருர். அந்தணர் உடன்வர அடைந்தனர் ஆலயம். கண்டவர் அனைவரும் காணுயல் நின்றனர். கனகசபையியிற் கலந்தனர் நந்தனர். காணுமை அறம்புரிந்தமையால் நந்தனர் வாழ்நாள் வழி தூர்ந்தது.

"தில்லைவா ழந்தணரு முடன்செல்லச் சென்றெய்திக்
கொல்லைமான் மறிக்கரத்தார் கோபுரத்தைத் தொழுதிறைஞ்சி
ஒல்லைபோ யுள்புகுந்தார் உலகுய்ய நடமாடும்
எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களுங் கண்டிலரால்.

அந்தணர்க ளதிசயித்தார்; அருமுனிவர் துதிசெய்தார்;
வந்தணைந்த திருத்தொண்டர் தம்மைவினை மாசறுத்துச்
சுந்தரத்தா மரைபுரையும் துணையடிகள் தொழுதிருக்க
அந்தமிலா ஆனந்தப் பெருங்கூத்தர் அருள்புரிந்தார்."

என்றபடி தெருளடைந்து இவர் பிறவிதீர்ந்து நின்ருர். வீழ்நாள் படாமை நன்ருற்றின் அஃது ஒருவன் வாழ்நாள் வழியடைக்குங்

கல்லாம் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். இதன் விரிவு பெரியபுராணத்தில் காணப்படும்.

சென்றநா ளெல்லாம் சிறுவிரல்வைத் தெண்ணலாம்
நின்றநாள் யார்க்கும் உணர்வரி—தென்றொருவன்
நன்மை புரியாது நாளுலப்ப விட்டிருக்கும்
புன்மை பெரிது புறம். (நாலடியார்.)

என்று முயரின்பம் எய்த விரும்பினால்
நன்று புரிக நயந்து.

அறம் பிறவியை நீக்கிப் பேரின்பம் தரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

39. கூடிமனை யின்பமுற்ற கோவலனேன் மாதவியால்
கோடிதுன்பம் கொண்டான் குமரேசா—தேடும்
அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழும் இல. (க)

இ—ள்.

**குமரேசா!** மனைவியோடு கூடி யின்பமுற்ற கோவலன் மாதவியால் ஏன் பெருந்துன்பம் அடைந்தான்? எனின், அறத்தான் வருவதே யின்பம்; மற்ற எல்லாம் புறத்தபுகழும் இல என்க.

மற்று என்னும் இடைச்சொல் அறத்துக்கு மறுதலையான மறத்தைக் குறித்து நின்றது.

மற்று எல்லாம் = பாவத்தால் வருவனவெல்லாம்.

புறத்த என்றது இன்பத்துக்குப் புறமாகிய துன்பத்தை. இறந்தது தழுவிய எச்சவும்மையானது இன்பமும் இல்லையென்பதை விளக்கி நின்றது.

அறநெறியால் வரும்பொருளே ஒருவனுக்கு இன்பமும் புகழும் தரும்பொருளாம் என்பதும், பிறநெறியில் வருவன துன்பமும் பழியுமே தருவனவாம் என்பதும், இதற்குச் சான்றாகக் கோவலன் அறநெறியாற் பெற்ற கண்ணகியால் இன்பமும் புகழும் எய்தினான் என்பதும், மறநெறியால் கொண்ட மாதவியால் துன்பமும் பழியும் அடைந்தான் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன.

## கதை.

சோழநாட்டிலே காவிரிப்பூம்பட்டினத்திலே வணிகர்குலதில கனாகிய மாசாத்துவான் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் இருநிதிக்கிழவன் எனப் பெருநிதியுடையவன். பெருமனைக் கிழத்தியென்னும் மனைவியோடுகூடி அவன் இல்வாழ்க்கையை யினிது நடத்தினன். இங்ஙனம் நடத்திவரும் நாளில் அவனுக்கொரு புதல்வன் தோன்றினன். அப்புதல்வனுக்குக் கோவலன் என்று பெயரிட்டார் மிக்க சிறப்போடு போற்றிவளர்த்தார். இவன் பேரழகுவாய்ந்தவன். பருவம் அடைந்தபின் அந்நகரில் மாநாய்கன் மகளாகிய கண்ணகியென்னும் புண்ணியவதியை இவனுக்குத் திருமணம் முடித்தார். இருவரும் ஒருமனப்பட்டு இல்வாழ்ந்திருந்தார். அன்புடன் இன்பம் ஆரத்துய்த்தார். கோவலன் அறநெறியில் பெற்ற தனது மனைவியை நோக்கி,

> "மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!
> காசறு விரையே! கரும்பே! தேனே!
> அரும்பெறற் பாவாய்! ஆருயிர் மருந்தே!
> பெருங்குடி வாணிகன் பெருமட மகளே!
> மலையிடைப் பிறவா மணியே என்கோ?
> அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ?
> யாழிடைப் பிறவா இசையே என்கோ?
> தாழிருங் கூந்தற் றையால் நின்னை யென்று
> உலவாக் கட்டுரை பல பாராட்டி." (சிலப்பதிகாரம்.)

நாளும் மகிழ்ந்து நலமுற வாழ்ந்தான். இங்ஙனம் வாழ்ந்து வரும் நாளில் மாதவியென்னும் பெயரினையுடைய ஒரு பொதுமாதைக் கண்டான். அவள்மேற் காதல் கொண்டான். அதனால் கற்புத்தெய்வமாகிய தனது காதலியை மறந்தான். மாதவியுடனே மருவி மகிழ்ந்தான். அவளால் தனது பொருள் முழுதையும் ஒருங்கே இழந்தான். வறியனாயினன். அதன்பின் தன்மனைவிபால் வந்தான். கண்ணகி தன் கணவனைக் கண்டாள். அவன் நிலைமையைநினைந்தாள். நெஞ்சுருகினாள். கலங்கினாள். தனது காலில் அணிந்திருந்த அழகிய பொற்சிலம்பைக் கழற்றிக் கோவலன் கையிற் கொடுத்தாள். இதனை விலைப்படுத்துங்கள் அப்பொருள்கொண்டு நாமிருவரும் இனிது வாழலாம் என்றுகூறிக் கணவ

ளைத்தேற்றினாள். அவனுந் தேறினான். அச்சிலம்பை விற்றற்பொருட்டு மனைவியோடு மதுரைக்குச் சென்றான். சென்றவிடத்தில் தீவினைவயத்தால் கோவலன் கொலையுண்டிறந்தான். இத்துன்பமும் பழியும் மறநெறியால் வந்த மாதவியால் இவனுக்கு வந்தன. இதன் விரிவைச் சிலப்பதிகாரத்தில் காண்க.

தருமமாவதுவே இன்பம் தருமலால் தருமநீக்குங
கருமமாவதுபோல் தோன்றிக் காட்டினும் பசுமட்பாண்டத்
தருமையா நிரப்புந்தெண்ணீ ரனைத்துமப் பாண்டத்தோடும்
ஒருமையாக் கெடுதலேபோன் றொருகணத் தழியுமன்றே.
(பிரபோத சந்திரோதயம்.)

ஞானியெனத் தேவனென நல்லனெனச் செல்வனெனக்
கோனெனப்பல் கோடி கொடுக்கும்; சிறப்பினையும்
ஈனும்; மறந்தால் இடர்பலவும் ஈனுமால்
ஆறாது செய்க அறன். (இன்னிசை)

மற்றறிவா நல்வினை யாமிளையம் என்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு. (நாலடியார்.)

அறமுடையான் இன்ப மடைவானஃ தில்லான்
உறமிகுந்த துன்ப முறும்.

அறநெறியால் வருவனவே ஒருவனுக்கு இன்பமும் புகழும் தருவனவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

40. நல்வினையே செய்தான் நளன்பாம்பின் செய்கைகண்டும்
கொல்வினையேன் விட்டான் குமரேசா—சொல்லிற்
செயற்பால தோரும் அறனே யொருவற்
குயற்பால தோரும் பழி. (ம)

இ—ள்.

**குமரேசா!** நளன் நல்வினையையே செய்தான பாம்பின் செய்கையைக்கண்டும் ஏன் கொல்வினையைத் தவிர்ந்தான்? எனின், அறனே ஒருவனுக்குச் செயற்பாலது; பழி உயற்பாலது என்க.

அறனே என்பதில் ஏகாரம் தெளிவுதோன்றநின்றது. ஒரும்

என்னும் இடைச்சொற்கள் இரண்டும் அசைநிலையாயின. உயற்பாலது = ஒழிக்கப்படும் உரிமையையுடையது.

ஒருவன் விரும்பிச் செய்யத்தக்கது அறமே; வெறுத்து ஒழிக்கத்தக்கது பழியே என்பதாம்.

விதியும் விலக்கும் இதில் விதந்து கூறினர். ஒருவன் புகழ் பயக்கும் வினைகளைப் பேணிச்செய்து பழிவிளைக்கும் செயல்களை நாணி ஒழிக்கவேண்டும் என்பதாம். இவ்வுண்மை நளன்பால் உணரப்படும்.

கதை.

நளன் நிடதநாட்டி லுள்ள மாவிந்தபுரியில் விளங்கியிருந்தான். சந்திரகுலதிலகன். திகிரியுருட்டி நிலமுழுதும் ஆண்ட செங்கோல் வேந்தன். விதர்ப்பதேசத்து வீமராசன் மகளாகிய தமயந்தியை மணம்புரிந்தான். அதில் உண்டான செற்றத்தால் கலி இவனைத் தொடர்ந்தான். அதனால் இவன் சூதாடி நாடிழந்தான். மனைவியோடு வனம் புகுந்தான். பின் பிரிந்து அகன்றான். அக்காலத்தில் அங்கே கார்க்கோடகன் என்னும் பாம்பொன்று காட்டுத்தீயில் அகப்பட்டுப் பதைத்துத் துடித்தது. நளன் அதனைக் கண்டான். இரக்கமுற்று நெருப்பினுட் புகுந்தான். அதனை வெளியேற்றிக் காப்பாற்றினன். பின் அஃதோர் ஏதுவால் இவனைத் தீண்டியது. தீண்டி வருத்தினும் அதற்குயாதொரு தீங்கும்செய்யாமல் அரசன் நின்றான். அது பின் இவனுக்கு நன்மையாக முடிந்தது. புகழுக் கேதுவாகிய அறவினையை உளமுருகிச் செய்தான்; பழிவினையை யாண்டும் பற்றாதொழித்தான். ஒருவனுக்குச்செயற்பாலது அறனே உயற்பாலது பழியே; என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். இதன் விரிவை நள சரிதத்தில்காண்க

கொள்ளுங் கொடுங்கூற்றம் கொல்வான் குறுகுதன்முன்
உள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணைகோலி வையார்
பெருகுதற்கண் என்செய்வார் பின். (நன்னெறி.)

காலைச்செய் வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச்
சாலச்செய் வாரே தலைப்படுவார்—மாலை
கிடந்தான் எழுதலரிதால் மற்றென்கொல்
அறங்காலை செய்யாத வாறு. (அறநெறிச்சாரம்.)

பாம்பழல் வாயினுற் பற்ற மண்டுகம்
தேம்பிடுந் துயருறுஞ் சீவன் தேயுநாள்
ஓம்பிட வல்லரே யுற்ற மற்றையார்
போம்பொழு தருந்துணை புரிந்தபுண்ணியம். (சிவதருமோத்தரம்)

மெய்யறிவ னூலின் விதித்த விலக்கிய
செய்தலும், செய்யா விடலும், இகழுறன்
மைதீர் மனநாவால் காயத்தால் வாய்ப்பன
செய்கவென் றொன்றுந் தெரிந்து. (இன்னிசை.)

இன்றுகொல்! அன்றுகொல்! என்றுகொல்! என்னாது
பின்னையே நின்றது கூற்றமென் றெண்ணி
ஒருவுமின் தீயவை; ஒல்லும் வகையான்
மருவுமின் மாண்டார் அறம். (நாலடியார்.)

ஒருவன் செய்யத் தகுவதும், ஒழிக்கத்தகுவதும், இதனால் கூறப்பட்டன.

இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.

அறம் உயிர்கட்குச் செல்வமுதலிய எல்லாநலங்களையுந் தந்து சிறப்பையுங் கொடுக்கும். அறமே ஒருவனுக்குச் சிறந்த ஆக்கம். அதனை மறந்தவர் கெடுவார். இயன்றமட்டும் அறத்தை என்றும் எங்கும் செய்தல் வேண்டும். மனத்தில் குற்றம் இல்லாதவனே உத்தம அறவோன். பொறாமை கோபம் ஆசை முதலிய இழி குணங்கள் இல்லாமல் ஒருவன் அறத்தைச் செய்தல் வேண்டும். அதனை இளம் பருவத்தே செய்யவேண்டும். அதன் பயனை அனை வரும் கண்கூடாகக் காணலாம். ஒருவன் அறஞ் செய்வானாகில் அவன் பிறவி தானே நீங்கிவிடும். அற நெறியால் வருவனவே புகழும் இன்பமும் பொருந்தப் பயக்கும். பிறநெறியால் வருவன பழியும் துன்பமும் இழிவுடன் கொடுக்கும். ஆதலால் ஒருவன் கொள்ளத்தக்கது அறமே; தள்ளத்தக்கது பழியே; என்பனவாம்.

4-வது அறன்வலியுறுத்தல் முற்றிற்று.

பாயிர முற்றிற்று.

# இல்லறவியல்.

இல்லின்கணிருந்தும் அதனைத் துறந்து நின்றும் அறம் செய்யலாம் ஆதலால் இல்லறம் துறவறம் என அது, இருவகைப்படும். எல்லார்க்கும் எளிதாக இனிதமைந்து நிற்கும் இயல்பினதாகலின் முன்னதாக இல்லறம் கூறுகின்றார். இஃது இல்வாழ்க்கைமுதல் புகழ் ஈறாக இருபது அதிகாரங்களை யுடையது.

## 5-ம் அதிகாரம் இல்வாழ்க்கை.

அஃதாவது மனைவியோடுகூடி ஒருவன் இல்லின்கண் இருந்து வாழும் இயல்பு. முன்னர் வலியுறுத்திய அறத்திறத்தினை இதில் உணர்த்துகின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

41. ஏனோமற் றெல்லார்க்கும் இன்றுணையா நன்றுசெய்தான்
கோனும்வல் லாளன் குமரேசா—ஞானமுடன்
இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. (க)

இ—ள்.

குமரேசா! வல்லாளன் என்னும் அரசன் எல்லோருக்கும் இனிய துணையாய் நின்று ஏன் உதவிசெய்தான்? எனின், இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை என்க.

நல் ஆற்றின் நின்ற துணை = நல்ல ஒழுக்க நெறியின்கண் நிற்கின்ற நிலையான துணை. ஆறு நெறி வழி என்பன ஒருபொருளன.

பிரமச்சாரி, கிருகத்தன், வானப்பிரத்தன், சந்நியாசி என்னும் நால்வகை நிலையினரும் ஒருவரிசையில்வைத்து எண்ணப்படுவார்; அவருள் கிருகத்தனாகிய இல்வாழ்வானை வேறுபிரித்தமையால் ஏனையோரை மூவர் என்றார். இது தொகைக்குறிப்பு.

இல்வாழ்பவன், சந்நியாசி முதலிய மூவர்க்கும் உணவும், உடையும், மருந்தும், இடமும் தந்து ஆதரிக்கவேண்டும் என்ப

13

தாம். அவ்வுணவு முதலியவற்றால் அவர்கள் பசி, குளிர், நோய் முதலியன நீக்கித் தங்கட்குரிய தவவொழுக்கங்களை நன்குசெய்து உய்வார்கள்.

ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குச் செல்லுகின்ற வழி நடையினர்க்கு இடையிலே யுண்டாகும் தடைகளை நீக்கிக் குறித்த இடத்திலே யவரைக் கொண்டுபோய்ச்சேர்க்கும் நல்ல வழித்துணை யாளர்போல், பந்தமாகிய இந்த உலகத்திலிருந்து முத்தி உலகை நோக்கிச்செல்லும் அறநெறியாளர்க்குப் பசி முதலியவற்றால் உள வாகின்ற வருத்தங்களைநீக்கி அவரை அறநெறியில் வழுவாமல் செல் லும்படி செய்துநிற்றலால் இல்வாழ்வானை அவர்க்கு "நல் ஆற்றில் நின்ற துணை" என்றார். இனி ஆற்றில் நின்ற நல் துணை எனவும் கொள்ளப்படும். இறைவனே எல்லார்க்கும் துணை எனினும் இம் மூவர்க்கும் வெளிப்படையாகஇல்வாழ்வானே துணையாம்என்றபடி.

துறந்தார் முதலிய சிறந்தார் எவர்க்கும் இல்வாழ்வானே நல்ல துணை என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வல்லா ளன்பால் உணரப்படும்.

## கதை.

வல்லாளன் என்பவன் திருவண்ணாமலையில் இருந்த ஒரு சிற ந்த அரசன். விழுமிய குணங்கள் பலவும் நிறைந்தவன். நெறி வழுவாதவன். நற்குணம் நிறைந்த இரண்டு தேவிமாரோடு கூடி யிவன் இல்வாழ்ந்திருந்தான். எல்லாரிடமும் இரக்கமும் அன்பும் காட்டினன். துறவோர் முதலிய அறவோர் எவர்க்கும் அருந் துணையாய் நின்றான். அவர்கட்கு உணவும்உடையும் தினமும் உத வினன். இவன் செய்துவருகின்ற இல்லறத்தின் சிறப்பையும் இவனது வள்ளற்குணத்தையும் இறைவன் எண்ணினர். மகிழ்ந் தார். அன்புடையிவன்பால் அருளுடன் வந்தார். சங்கமவேடந் தரித்தார். ஒரு சந்நியாசிபோல் நின்றார். கண்டான் அரசன். காலில் விழுந்தான். தனது திருமனைக்குள் அழைத்துக்கொண்டு போய் உபசரித்தான். அவர் விரும்பிய எதையும் வெறுப்பின்றி உதவினன். எல்லாருக்கும் நல்ல துணையாய் நின்று இவன் இல் வாழ்ந்தான். அதனால் தனிமுதல்வனாகிய பரமனே யிவனுக்கு இனிய புதல்வனாய் வந்து இன்பஞ்செய்தான். பின்பு இவன் இசை

பெற்று நின்றான். ஈறிலின்பம் எய்தினான். இஃது அருணாசலப் புராணத்தில் உள்ளது.

இறந்து படவரினும் எண்ணியறஞ் செய்க
மறந்தும் புரியல் மறம்.

என்று மெவர்க்கும் இதமாய்நின் றில்வாழ்வான்
நன்று புரிவ னயந்து.

இல்வாழ்வான் இயல்பு இதனால் கூறப்பட்டது.

---

42. உற்றதுணை யாய்முன் உதவினனேன் பாண்டவர்க்குக்
கொற்ற விராடன் குமரேசா—முற்றும்
துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை. (உ)

இ—ள்.

**குமரேசா!** விராடன் பாண்டவர்க்கு உற்ற துணையாய் நின்று ஏன் உதவினான்? எனின், துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் இல்வாழ்வான் என்பான் துணை என்க.

துறந்தார் = ஆதரித்து வந்தவரால் கைவிடப்பட்டவர்.

துவ்வாதவர் = உணவு முதலியன துய்க்கப்பெறாதவர். வறியர் என்றபடி. இறந்தார் = உயிர்நீங்கினவர், செத்தவர் என்றபடி.

கதியற்றவர், பொருளற்றவர், உயிரற்றவர் ஆகிய இம்மூவருக்கும் இல்வாழ்வான் துணையாய்நின்று உதவவேண்டும் என்பதாம்.

துறந்தாரை வினவியடுத்தும், துவ்வாதவரை உணவு முதலியன கொடுத்தும், இறந்தாரை உரிய நீர் விடுத்தும், ஆதரிக்க வேண்டுமென்பது கருத்து.

மேல் தன்னோடு இயைபுடைய மூவரைக் குறித்தார்; இதில் அஃதில்லாத மற்றொரு மூவரையும் இணைத்து இவ் அறுவருக்கும் இல்வாழ்வான் துணையென உணர்த்தினார். இனி வருவதில் ஐவரை உணர்த்துவர்.

பெரியோர் வறியோர் முதலிய எவர்க்கும் இல் வாழ்வான்

துணையாவான் என்பதும், இதற்குச் சான்றாக விராடன் அனைவருக்கும் துணையாய்உபகரித்தான்என்பதும் இதில் உணர்த்தப்பட்டன.

## கதை.

விராடன் என்பவன் ஓர் அரசன். மச்ச தேசத்திலுள்ளவன். விராட புரத்திலிருந்து இவன் அரசு புரிந்தான். இக்காலத்தில் மேட்டுப்பாளையத்தை அடுத்துள்ள தாராபுரமே அக்காலத்தில் இப்புரம் இருந்த இடம் என்பர். இந்த அரசன் எல்லார்க்கும் நல்ல துணைவனாய்ச் செல்வாக்கோடு இல்வாழ்ந்திருந்தான். பாண்டவர் பன்னிருவருடம் வனவாசம் செய்து முடித்தபின்னர் ஒருவருடம் இவன் வசம் வந்து உருவங்கரந்து ஒதுங்கி யிருந்தார். அவரை அன்புடன் இவன் ஆதரித்து வந்தான். உத்தரன் என்று ஒரு மகனும், உத்தரை என்று ஒரு மகளும் இவனுக்கு உண்டு. இவன் மனைவி பெயர் சுதேட்டிணை. வருடமுடிவில் பாண்டவரென உண்மை தெரிந்தபின் இவன் பெருமகிழ்வடைந்தான். அதன் பின்னும் பாண்டவர்க்குப் படைத்துணையாய் நின்று வேண்டுவன புரிந்தான். தன் மகளாகிய உத்தரையைஅருச்சுனன் மகனாகிய அபிமன்னனுக்கு மணமுடித்துத் தந்தான்.

துறந்தார், துவ்வாதவர் என மறைந்துவந்த பாண்டவர்க்கு இவன் சிறந்த துணையாய் நின்று உயர்ந்த உதவிகள் செய்தான். அதனால் இல்லறத்தில் சிறந்து இவன் இசைபெற்று நின்றான். இவனது மனப்பண்பையும், மனைமாட்சியையும் அனைவரும் புகழ்ந்து போற்றினர். விரிவைப் பாரதத்தில் காண்க.

> துறந்தவர் மூவர்தேவர் துளக்கமில் பிதிரர்நோயர்
> அறந்திகழ் விருத்தர்பாலர் அந்தணர் நல்விருந்தர்
> சிறந்ததாய் தந்தைசுற்றந் திருத்தமுற் றதற்பின்மிக்க
> அறந்தரு மில்லாளோடும் அருந்தலில் லறமதன்றே.
>
> (பரமார்த்த தரிசனம்.)

> உற்ற மகவுக் குறுதாய்போல் மற்றவர்க்குப்
> பற்றுதல் இல்லறத்தான் பண்பு.

இல்வாழ்பவனே வறியார்க்கு உரிய துணை என்பது இதனால் கூறப்பட்டது.

T24.OC+043



43. தேடுபுகழ்க் காளத்தி சென்றடைந்தார் தம்மையெல்லாம்
கோடாதேன் காத்தார் குமரேசா—பீடுடைய
தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை. (ங)

இ—ள்.

குமரேசா! காளத்தியப்ப முதலியார் விருந்து ஒக்கல் முதலிய எல்லாரையும் ஏன் ஆதரித்து வந்தார்? எனின், தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்று ஐம்புலத்தாறு ஓம்பல் தலை என்க.

ஒக்கல் = சுற்றம். புலம் = இடம். ஐம்புலத்து ஆறு ஓம்பல் = ஐந்து இடத்தும் செய்யத்தக்க அறநெறியை வழுவாமல் செய்தல். ஐம்புலத்தார் என்று பாடங்கொண்டால் ஐந்து இடத்தாரையும் என்று கொள்க. தலை = சிறந்தஅறமாம் என்றபடி.

தான் என்றது இல்லறத்தானை.

பிரமச்சாரி வானப்பிரத்தன் சந்நியாசி துறந்தார் துவ்வாதார் இறந்தார் தென்புலத்தார் தேவர் விருந்தினர் சுற்றத்தார் என்னும் பதின்மரையும் ஆதரிக்கவேண்டுவது இல்வாழ்வானுக்குக் கடமை என்பதாம். இவ்வியல்பு காளத்தியப்ப முதலியார்பால் காணப்படும்.

கதை.

காளத்தி முதலியார் என்பவர் தொண்டை மண்டலத்திலே கின்றையென்னும் ஊரிலே பிறந்தார். இல்லறத்திலிருந்து எல்லாரையும் ஆதரித்து வந்தார். தயையும் வள்ளற்குணமும் வாய்ந்தவர். வறுமைப்பிணிக்கு மருந்து போல்பவர். நாளும் பல இடங்களில் இருந்தும் இவரை நாடிவந்தார்பலர். அவரனைவருக்கும் வேண்டுவன தந்து அன்போடு அனுப்பினின்றார். தம்பால்வந்தவரது முகம் மலர இவரது அகமகிழும். பிறர்க்கு இதம் புரிதலையே யிவர் பேரின்பமாகக் கொண்டார். ஒக்கலையும் விருந்தையும் இவர்பக்கம் வைத்து உண்டார். தம்மையும் காத்துத் தமரையும் போற்றிய இவரது இல்லறமாண்பை யெல்லோரும் புகழ்ந்து போற்றினர். தொண்டைமண்டல சதகமுதலிய பலநூல்களிலும் இவர் சரிதம் காணப்படும்.

விருந்து புறந்தரான் வேளாண்மை செய்யான்
பெருந்தக் கவரையும் பேணுன்—பிரிந்துபோய்க்
கல்லான் கடுவினை மேற்கொண் டொழுகுமேல்
இல்வாழ்க்கை என்ப திருள். (அறநெறிச்சாரம்.)

பல்லறத்தா ரெல்லாம் பயன்பேற் றினிதோங்கார்
இல்லறத்தா னின்றேல் இனிது.

இல்லறத்தான், தென்புலத்தார்முதலிய ஐவரையு பேணவேண்டுமென்பது இதனல் கூறப்பட்டது.

44. வள்ளற் சடையன் வழியென்றுங் குன்றுச்சீர்
கொள்ளநின்ற தென்னே குமரேசா—தள்ளும்
பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல். (ச)

இ—ள்.

**குமரேசா!** சடையவள்ளலது வழி யென்றுங் குன்றுமல் நின்றது என்னே? எனின், பழிஅஞ்சிப்பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை வழி எஞ்சல் எஞ்ஞான்றும் இல் என்க.

எஞ்சல் = தேய்ந்து அழிதல். வழி = மரபு. தொடர்பாகவருதலின் இஃது இப்பெயர் பெற்றது.

பழிக்கு அஞ்சுதலும் பகுத்து உண்டலும் ஒருவனுக்கு அமையுமாயின் அவன் சந்ததி என்றுங் குன்றுமல் நின்று நிலவும் என்பதாம்.

ஒருவன் வழி அழியாமைக்கு வழி இதில் உணர்த்தினர்.

ஒருவன் நல்வழியிற் பொருளீட்டி அதனைப் பிறர்க்குப் பகுத்துதவி வருவானுயின் அவன் வழியும் வாழ்க்கையும் நெடிதுவாழும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சடையப்பர் வழியில் காணப்படும்.

## கதை.

சடையப்பபிள்ளை யென்பவர் சோழநாட்டிலுள்ள திருவெண்ணெய் நல்லூரிலே வேளாளர் குலத்திலே பிறந்தார். இவரது காலம் இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரத்து நூறு வருடங்கட்கு முன்னராம். பெருந்தன்மையும் வள்ளற் குணமும் ஒருங்கே நிறைந்தவர். பழுதில்லாத உழவு தொழிலால் பொருளீட்டி அதனைப்பலர்க்கும் பகுத்துக் கொடுத்து வந்தார். கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பரை அன்புடன் ஆதரித்துவந்தார். "அடையா நெடுங் கதவும் அஞ்சலென்ற சொல்லும் உடையான் சடையப்பன்" என உலகம் புகழ இவர் உயர்ந்து நின்றார். இதனுனே இவரது விருந்தோம்பும்திறம் காணப்படுகின்றது. இவர் இல்வாழ்க்கை நலம் நல்லோர் பல்லோராலும் நன்கு புகழப்பட்டுள்ளது. சூரியகுலத்தரசர் காலத்திருந்தே இவர் மரபினர் சிறந்து விளங்கினர்.

> அரியணை அனுமன்தாங்க, அங்கதன் உடைவாள் ஏந்தப்,
> பரதன்வெண் குடைகவிக்க, இருவரும் கவரிவீச,
> விரைசெறி குழலியோங்க வெண்ணெயூர்ச் சடையன்றங்கள்
> மரபுளோர் கொடுக்கவாங்கி வசிட்டனே புனைந்தான்மௌலி.
> (முடிசூட்டுப்படலம்.)

இதனுல் பல்லாயிர வருடங்கட்கு முன்னரே அவதரித்த இராமர் காலந்தொட்டே வெண்ணெயூர்ச் சடையன் வழியார் சிறந்து விளங்கி வந்துள்ளார் என்பது புலனும். பகுத்துண்டு உபகரித்து வருபவனது மரபு என்றும் இனிதாக நிலைத்துவரும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

> உரம்பெறு பிரம சரிவனத்துறைவோர் உலகனைத்தையு மறநீத்தோர் பரம்பரன் தெனுதுபுலத்தவர் விருந்து பசையுடை ஒக்கல் மன்றுறந்தோர், அரம்புசெ யிலம்பாட்டின ிறந்தாரென் றையிருவரையு நன்றேம்பி, வரம்பெறு தமைப்பிேம்புந ரல்லா தவர் மனையறத்தவ ணிலரே. (பேரூர்ப்புராணம்.)

> ஆர்ந்த பறவைகட் கால்போல இல்வாழ்வான்
> நேர்ந்தவர்க் கேல்லாம் நிலை.

ஒருவன் இல்வாழ்க்கையை நடத்தும் வகை இதனுல் கூறப்பட்டது.

45. மண்டுபுகழ் மாறனார் மாறாத அன்பறனேன்
கொண்டிருந்தார் இல்லிற் குமரேசா - தண்டாத
அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

இ—ள்.

குமரேசா! இளையான்குடிமாற நாயனார் அன்பும்அறனும் உடையராய் ஏன் இல்வாழ்ந்தார்? எனின், அன்பும் அறனும் உடைய இல்வாழ்க்கையே பண்பும் பயனும் பெறும் என்க.

ஒருவனது இல்வாழ்க்கை அன்பையும் அறத்தினையு முடையதாயின் அது பண்பும் பயனும் அமைந்ததாம் என்பதாம்.

அன்போடு அறம் புரியும் இல்வாழ்பவனே பண்போடு பயன் பெறுவான் என்பது கருத்து.

அன்பும் அறனும் இல்லையாயின் ஒருவன் இல்வாழ்க்கையால் யாதொரு பயனும் இல்லை என்பது குறிப்பு.

இல்வாழ்வான் தனது மனைவி மக்களிடத்தில் மிக்க அன்பு செய்தும், பிறரிடத்துப் பகுத்துண்டல் முதலிய அறஞ்செய்தும் வாழவேண்டும் என்பதும், இதற்குச் சான்றாக மாறனார் அன்பும் அறமும் உடையராய் இல்வாழ்ந்தார் என்பதும் இதில் உணர்த்தப் பட்டன.

## கதை.

மாறனார் என்பவர் அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவர். பாண்டிநாட்டிலே இளையான்குடி என்னும் ஊரிலே வேளாளர்குலத்திலே இவர் பிறந்தார். அதனால் இவர் இளையான்குடி மாறநாயனார் எனப் பெற்றார். உத்தம குணங்கள் நிறைந்த தம் பத்தினியோடு கூடி இல்வாழ்ந்திருந்தார். நிறைந்த செல்வமும் விரிந்த நிலங்களும் உடையவர். அடியார் முதலிய அனைவர்க்கும் நாளும் நல்லுணவு அளித்தார். மிகவும் அன்புடையவர். இல்லறத்தை யின்புற நடத்தினார். இங்ஙனம் வருகின்றநாளில் இவரது செல்வம் குறைந்தது. வறுமை நிறைந்தது. ஆயினும் அன்பும் அறனும் உடையராய்நின்று இவர்இல்லறத்தை இன்புறச்செய்தார்.

